கொள்ளை அழகுடன்
நெசவுசெய்த வாயில்கள்,
குளுமையானவை,
லேசானவை, கவர்ச்சி
மிக்கவை, எடுப்பான
கண்நிறைந்த வண்ணங்கள்,
எழில் நிறைந்த கோல
நிறங்கள்: மனம்போல்
தேர்ந்தெடுக்கலாம்,
மதிப்புடன் விளங்கலாம்!




# மபத்லால் க்ரூப்

## 2x2 வாயில்கள் & லினேக்கள்

தவிர, "டெபிலேஸ்டு" மற்றும் "ம:பினேஸ்டு" ஆகிய தரங்களிலும் கிடைக்கும்.

நியு ஷோராக் (ஷோராக்) அஹமதாபாத். நியு ஷோராக், நடியாத். ஸ்டேண்டர்ட், பம்பாய். ஸ்டேண்டர்ட் (நியுசைனு) பம்பாய். ஸ்டேண்டர்ட் தேவாஸ். ஸாஸுன், பம்பாய். ஸாஸுன் (நியு யூனியன்) பம்பாய். ஸுரத் காட்டன், ஸுரத். மபத்லால்பைன், நவ்ஸாரி

LPE Alyars. M. 86 TM

## நினைவுத் திரையில்...

அருப்புக்கோட்டையில் இவ் வாரத்தில் காக்கி நாடாவிலிருந்து வந்த நாற்றமெடுத்த அரிசி ரேஷனில் கொடுக்கப்படுகிறது. இந்த அரிசியைச் சாப்பிடுவதால் பொதுஜனங்களுக்கு வயிற்றுக் கழிவும் வயிற்றோட்டமும் ஏற்படுகிறது. மகா மட்டரகமான அரிசி போடுவது பற்றிப் பொதுஜனங்கள் வருந்துகிறார்கள். உணவு மந்திரிக்கும் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் காமராஜுக்கும் மற்றும் பலருக்கும் மாதிரிக்கான அரிசி அனுப்பப் பட்டிருக்கிறது.

அருப்புக்கோட்டை
29 — 3 — 49

ஏ. எஸ். மணி

[இந்தக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ள அரிசிக்கு மாதிரி அனுப்பி வைத்திருக்கிறார்கள். பூச்சிக் கூடுகட்டி உளுத்துப்போன அரிசியைப் பார்க்கவும் அருவருப்பாயிருக்கிறது. — ஆசிரியர்]

கல்கி, வட்டமேஜை 17 - 4 - 1949

# கல்கி
## பொருளடக்கம்

பரபவ, ஆனி 12. - ஜூன் 26



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

சக்கரத்தைப் புதைத்துவிட்டார்களே!

தேர்தல் பிரசார வண்டி

காங்கிரஸ்

भारत INDIA

ரூபாயின் புதிய மதிப்பு

வி லை வா சி க ள்

பண்டங்களின் விலை மட்டம்

இருந்த இடத்தைவிட்டு நகரக் கூடாது!

புதிய மதிப்பு வெடி

PK

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 25 ❋ இதழ் 48



# புதிய மதிப்பின் பின்விளைவுகள்

**ராஜாஜி**

ரூபாய்க்குப் புதிய மதிப்பு வைத்ததன் மூலம் ஆள்கிற கோஷ்டி தனது நிருவாகத் தவற்றைப் பகிரங்கமாக ஒப்புக் கொண்டு விட்டது. இனியும் இவர்களை நம்பி நாடு தனது நடப்புக்களை ஒப்புவிப்பதற்கு இல்லை. புதிய மதிப்பு நிர்ணயமானவுடன் ரிசர்வ் பாங்கி கவர்னர் கல்கத்தாவில் நிருபர்களிடையில் பேசியதிலிருந்து கடந்த சில ஆண்டுகளாக நமது பொருளாதாரம் பயங்கரமான நெருக்கடி நிலையை அடைந்திருந்ததாக யாரும் உணர முடியும். பொருளாதாரத்தைப் பீடித்த வியாதி பயங்கரமானதெனில், அதற்கு நிவாரணமாகத் தரப்பட்டுள்ள புதிய ரூபாய் மதிப்பு என்ற மருந்தினாலும் பல சிரமமான விளைவுகள் நேரிடும்.

இருபதாண்டுகளுக்கு முன் நமது சர்க்காரிடம் ஏராளமான ஸ்டெர்லிங் இருப்பு நிதி இருந்தது. அப்போது நாம் வெளிநாடுகளுக்குக் கடன் பட்டிருக்கவில்லை. இப்போது கையிருப்பு முழுவதும் குறைந்து ஏராளமாகக் கடன் பட்டிருக்கிறோமெனில் இதற்குக் காரணம் என்ன? ரூபாய் மதிப்பைக் குறைத்ததற்குப் பாதுகாப்பாகவும் மன்னிப்பாகவும் வேறு பல நாடுகளை உதாரணம் காட்டி விஷயமறியாதவர்களைக் குழப்பி வருகிறார்கள். ஆனால் இந்நாடுகள் யுத்த காலத்தில் பெரும் பொருளாதாரச் சிக்கலில் ஆழ்ந்ததால் நாணய மதிப்பைக் குறைக்க வேண்டியிருந்தது. நம்முடைய விஷயம் அப்படியில்லை. யுத்தத்தாலோ அதுபோன்ற மற்ற இடர்ப்பாட்டினாலோ நாம் ரூபாய் மதிப்பைக் குறைக்கும்படி நேரவில்லை. உள்நாட்டு விஷயங்களைத் தாறுமாறாக நிர்வகித்ததைக் காலம் கடந்து ஒப்புக்கொள்ளும் அடையாளமாகவே ரூபாய் மதிப்பு குறைக்கப் பட்டுள்ளது.

குற்றத்துக்குத் துணையாக இருந்தவர் 'அப்ருவ'ராக மாறி, குற்றத்தைப் பகிரங்கப்படுத்தினால் அவர் கூறுவதை மற்ற சாட்சியத்தால் நிச்சயப்படுத்திக் கொள்வார்கள். ஆனால் குற்றவாளியே குற்றத்தை ஒப்புக் கொண்டால் வேறு சாட்சியமே வேண்டாம். அந்தக் குற்றவாளியை அதற்காக மன்னித்து விடுவதும் வழக்கம் இல்லை. ரூபாய் மதிப்பு மாற்றத்தின் மூலம் தமது குற்றத்தை ஒத்துக் கொண்டுள்ள குற்றவாளிகளோ இன்னமும் தங்களைப் பதவியில் வைத்திருக்க வேண்டும் என்று கேட்கிறார்கள்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே சுதந்திரக் கட்சி, 'பணவீக்கக் கொள்கைகளை விடாமல், இதே போல் இனியும் பெரும் திட்டங்களைப் போட்டு வந்தால் பணத்தின் மதிப்பைக் குறைக்கும்படி நேரிடும்' என்று எச்சரித்து வந்தது. அதை ஆட்சியாளர் காதில் போட்டுக் கொள்ளாததன் விளைவாக நாம் பயந்தது நடந்துவிட்டது.

உள்நாட்டில் ரூபாய் மதிப்பு விழுந்த பின் வெளிநாட்டுச் செலாவணியில் மட்டும் பழைய மதிப்பையே போலியாகப் பின்பற்ற முடியாது என்ற அறிவு அரசாங்கத்துக்குக் காலம் கடந்த பின் ஏற்பட்டிருக்கிறது. ஐந்தாண்டுகளுக்கு முன்பிருந்த உள் நாட்டு விலைவாசிகளைக்கூட மறுபடியும் ஏற்படுத்த முடியாதென்று நிதி மந்திரி கூறுகிறார். நேர்மையான மக்களுக்கெல்லாம் இப்போது நேர்ந்துள்ள கஷ்டங்களுக்குக் காரணம், தகுதி வாய்ந்த பெரியோர் பல்லாண்டுகளாகக் கூறி வந்ததற்கெல்லாம் சர்க்கார் செவி சாய்க்காதது தான். ரூபாயின் மதிப்புக் குறைந்ததற்கான முழுப் பொறுப்பையும் தோள் மீது தாங்க வேண்டிய காங்கிரஸ் சர்க்காருக்கு அதன்பிறகு ஒருநாள்கூட ஆட்சி பீடத்தில் அமர்ந்திருக்கத் தகுதியில்லை.

இப்போது ரூபாய் மதிப்பைக் குறைத்ததற்காகக் காங்கிரஸைப் பதவியிலிருந்து இறக்க வேண்டியதில்லை; முன்பு தவறான கொள்கைகளைப் பின்பற்றி மதிப்பைக் குறைக்கும்படியான அவசியத்தை ஏற்படுத்தியதற்காகவே அதனை ஆட்சியிலிருந்து அகற்ற வேண்டும். இப்போதும்கூடக் காங்கிரஸ்

தலைமைப் பீடம் வேண்டாவெறுப்பாகத்தான் ரூபாயின் மதிப்பை மாற்ற இணங்கியிருக்கிறது. அப்பட்டமாகச் சொல்வதானால், நாலாவது திட்டம் மூழ்கிவிடாமல், அதோடு சர்க்காரும் மூழ்கி விடாமல் காத்துக் கொள்வதற்காகத்தான் இப்போது புதிய மதிப்பு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

மதிப்பு மாற்றத்தின் விளைவாகச் செய்ய வேண்டிய தியாகங்கள் வீணாகாதிருக்க வேண்டுமாயின், இப்போதிலிருந்தே சர்க்கார் பணவீக்கக் கொள்கைகளை விட வேண்டும்; நியாயமாகக் கிடைக்கக் கூடிய அந்நிய உதவிகளை மட்டும் பெற்று, அதற்குள் தன் திட்டங்களை அடக்கி நிறைவேற்ற வேண்டும்.

உள்நாட்டு நிர்வாகச் செலவுகளில் மத்திய, ராஜ்ய சர்க்கார்கள் மிகுந்த சிக்கனம் காட்ட வேண்டும். பற்றுக்குறை பட்ஜெட் போடுவதையும், ரிஸர்வ் பாங்கியிலிருந்து இருப்புக்கு அதிகமாக 'ஓவர் ட்ராஃப்ட்' வாங்குவதையும் நிறுத்த வேண்டும். நான்காம் திட்டத்தைக் கணிசமாக வெட்ட வேண்டும். அமிதமான செலவு தேவைப்படும் பொகாரோ உருக்குத் திட்டம் உள்படப் புதிய மூலதனத் திட்டங்கள் யாவற்றையும் சர்க்கார் கைவிட வேண்டும்.

தனியார் துறையில் அந்நியர் பங்கு பெறுவதற்கு ஊக்கம் அளிக்க வேண்டும். நாட்டு அபிவிருத்தியின் அடித்தளமாக உள்ள திட்டங்கள் தவிர மற்றவற்றுக்குப் பிற சர்க்கார்களிடமிருந்து கடனுதவி பெறுவதை நிறுத்த வேண்டும்.

ரூபாயின் மதிப்புக் குறைந்ததன் விளைவாக விலைவாசி உயர்ந்து விடாமல் நிர்ப்பந்தத்தின் மூலம் கட்டுப்படுத்த நினைப்பது அசாத்தியம். இத்தகைய நடவடிக்கையால் கறுப்புச் சந்தை மேலும் பரவி, இலட்சியத்துக்கு நேர் விரோதமான விளைவை உண்டாக்கும். குற்றச் சட்டத்தின் உதவிகொண்டு விலையைக் கட்டுப்படுத்தும் சர்க்கஸ் வித்தையைச் சாதித்துவிட முடியாது.

இப்போது தேசத்தைக் காப்பாற்ற வேண்டுமாயின் விவசாய உற்பத்தி முக்கியமாக உயர வேண்டும். குத்தகைதாரர்கள், உழவர்கள் ஆகியோரின் வாழ் நிலை உயர்வதற்காகச் செய்யும் மாறுதல்கள் தவிர, நிலச் சொத்துரிமையில் கைவைப்பதில்லை என்ற வாக்குறுதியை அரசாங்கத்திடம் பெற வேண்டிய சந்தர்ப்பம் இது. சிறிய நிலச் சொந்தக்காரர்களுக்கு உற்பத்தியைப் பெருக்கவும் அது நல்ல முறையில் கடைக்கு வந்து விற்பனையாகவும் சகல வசதிகளும் செய்து தரவேண்டும். கட்டாயக் கொள் முதல், தானியப் போக்குவரத்துத் தடை முதலியவற்றை நீக்க வேண்டும். ரசாயன உரத்தை விட இதுவே முக்கியம்.

தொழில் உற்பத்தியை ஊக்கும் விதமாகச் சில சகாயங்களை அளிப்பது இன்றைய சிரமத்தைத் தீர்க்க ஒரு சிறிதே உதவும். மக்கள் சேமிப்புச் செய்து அதை முதலீடாக்குவதற்கு ஊக்கம் அளிக்க வேண்டும். அபரிமித வரியால் இன்று மூலதனம் ஏற்படுவதே அசாத்தியமாகி விட்டது. இப்போதேனும் வரிகளைக் குறைத்து உற்பத்தி பெருகச் செய்ய வேண்டும்.

வரிகளைக் குறைப்பதோடு, பெர்மிட் லைசென்ஸ்—கன்ட்ரோல்களையும், இறக்குமதி லைசென்ஸ், ஏற்றுமதிக் கட்டுப்பாடு, பிரயாணக் கட்டுப்பாடு இவற்றையும் நீக்கினால் தான் தனியார் துறையின் சுதந்திரப் போட்டி பூரணமாகச் செயலுக்கு வந்து விலைவாசி குறையும்.

மேலே கூறிய சீர்திருத்தங்கள் ஏற்படத் தேர்தல் வரை காத்திருப்பதற்கில்லை. இவற்றைச் செய்யாமல், வெறும் ரூபாயின் மதிப்பை மட்டும் குறைப்பதால் இதுவரை ஏற்பட்ட துன்பங்களோடு புதுத் துன்பங்களை உண்டாக்குவதாகவே முடியும். எனினும் இப்போதோ அல்லது எதிர்காலத்திலோ காங்கிரஸ் அரசாங்கம் இந்தச் சீர்திருத்தங்களைச் செய்யும் என்று எதிர்பார்க்க இடமில்லை.

அவநம்பிக்கையிலிருந்து நம்பிக்கைக்கும், ஊழலிலிருந்து நேர்மைக்கும், சோர்விலிருந்து உழைப்புக்கும் நாட்டைப் பூரணமாக மாற்றுவது வாக்காளர்களின் கையிலேயே இருக்கிறது. காங்கிரஸைப் பதவியிலிருந்து இறக்கி, அடக்கமும் பிரத்தியட்ச நோக்கமும் உள்ள ஒரு தேசப் பற்றுள்ள மந்திரி சபையும் உண்மையான ஜனநாயக பார்லிமெண்டும் ஏற்பட வழி செய்தால் தான் இந்த மகத்தான மாறுதல்கள் நிகழும்.

<u>அட்டைப்பட விளக்கம்</u>

# ம. பொ. சி.க்கு மணி விழா

இம்மாதம் 26 ஆம் தேதி திரு ம. பொ. சி. அவர்களுக்கு அறுபதாண்டு நிறைகின்றது என்று சொன்னால் யாரும் நம்பமாட்டார்கள். அந்தச் சிம்மக் குரலுக்கு மூப்பு ஏது என்பார்கள். அவர் குரலுக்கு மூப்பு இல்லை. அவருடைய சிந்தனை மூப்படையவில்லை. அவருடைய ஆக்கப் பணிக்குத் தளர்ச்சி ஏற்படவில்லை. அவர் வயதுதான் அறுபது ஆகிவிட்டது என்று காலண்டரும் பஞ்சாங்கமும் கட்டி நினைவுறுத்துகின்றன.

ஆதிநாளில் காங்கிரஸில் சேர்ந்து சிறைப்பட்டுப் பல இன்னல்களுற்ற தேசபக்த பரம்பரையைச் சேர்ந்தவர் ம. பொ. சி. பதவிக்கு வந்த காங்கிரஸின் போக்கு அவருக்குப் பிடிக்கவில்லை என்றாலும் அதனை எதிர்த்து நிற்கும் எதிர்க் கட்சிகளுடன் இணைந்து பணியாற்றவும் மனம் வராமல் தனியாக நின்று நட்பு முறையில் இடித்துக் கூறி வந்தார். காங்கிரஸின் போக்கு சற்றும் மாறவில்லை. தேச மக்கள் சொல்லொணாத் துயரங்களுக்கு உள்ளாகி வருகிறார்கள் என்பதை உணர்ந்து, எதிர்க் கட்சிகளுடன் இணைந்து காங்கிரஸைப் பதவியிலிருந்து இறக்க முயல்வதே தமது கடமை என்ற முடிவுக்கு இந்த அறுபதாம் பிராயத்தில் வந்திருக்கிறார்.

அவர் பணி சிறக்க வாழ்த்துகிறோம். இந்த மணி விழா நன்னாளில் அவருக்கு நீண்ட ஆயுளையும், நல்ல தேக ஆரோக்கியத்தையும் அருளும்படி எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

★

பம்பாயில் நடந்த ரயில் விபத்து ஒரு பயங்கரமான துர்ச் சம்பவம். குழந்தைகளை இழந்த தாய்மார்களுக்கு வார்த்தைகளால் துக்க நிவாரணம் தர முடியுமா? ஆறுதல் வார்த்தைகளும் துயரத்தை அதிகமே யாக்கும்.

இந்தப் பயங்கரத்தின் விளைவாக, விபத்துக்கள் ஏற்படாதவாறு ஏதேனும் ஏற்பாடுகள் செய்ய முடியுமாயின், துயரமயமான ஒரு கொடுமையாலும் எதிர்காலத்துக்கு ஒரு நன்மை விளைந்ததாக ஆகும்.




★

ரூபாயின் மதிப்பைக் குறைத்ததால் ஏன் உடனுக்குடன் பெரிய விளைவுகள் ஏற்படவில்லை என்று சிலர் ஆச்சரியப்படுகிறார்கள். இதற்குக் காரணம் உள்நாட்டு வியாபார உலகத்தில் நீண்ட காலமாகவே ரூபாயின் செலாவணித் திறன் குறைத்துத்தான் மதிப்பிடப்பட்டு வந்திருக்கிறது; அதை இப்போது அரசாங்கமும் அதிகாரபூர்வமாக ஒப்புக் கொண்டு விட்டது. அன்புக்குகந்த ஒரு பிள்ளையோ, தாயோ வெளியூரில் இறந்து விட்டதை அறிந்து குடும்பத்தினர் துக்கம் காத்தபின், இவ்விஷயத்தைத் தெரிவிக்கும் தந்தி வருவது போன்றதே சர்க்காரின் புதிய நடவடிக்கை. அந்நியச் சரக்குகளின் விஷயத்தில் ரூபாயின் வாங்கும் சக்தி இறங்கி விட்டதன் விளைவுகள் உடனடியாகத் தெரியா விட்டாலும், கூடிய சீக்கிரமே தெரிய வரும்.

★

நான் சொல்லப் போகும் விஷயத்தில் கருத்து வேறுபாடு இருக்கலாம்; எனினும் என் உறுதியான அபிப்பிராயத்தைச் சொல்கிறேன் :

ஒரு தேசத்தின் புராணத்திலிருந்து நவீனக் கற்பனைக் கதைகளைச் சிருஷ்டித்துக் குழப்பம் ஏற்படுத்தக் கூடாது. வெகு நல்ல நோக்கமுள்ள ஆசிரியரும்கூட புராண பாத்திரங்களைப் புதிய கதைகளில் புகுத்துவதால் புராணத்தின் பண்பு பாதிக்கப்படுகிறது. எனது இந்த ஆட்சேபணை கருத்தைத் தேர்ந்த ஆசிரியர்கள், சினிமாக் கதைத் தயாரிப்பாளர் ஆகியோர்முன் மரியாதையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நிலைப்பட்டு விட்ட புராண பாத்திரங்களைத் தற்காலத்தில் வெகு எளிதாகக் கையாளத் தொடங்கி விட்டார்கள்.

இன்றைய கதைகளை — நல்லவை, கெட்டவை, இரண்டுங்கெட்டான் ஆகிய யாவற்றையும்—பெரும்பாலானவர் வாசிக்கிறார்கள். இவர்களில் நம் இளைஞர்களுக்குப் புனிதமான புராணங்களுடன் பரிசயம் கிடையாது. எனவே, புராண பாத்திரங்கள் வருகிற புதிய கதைகளையும் ஆதாரபூர்வமான புராணமாகவே அவர்கள் எடுத்துக் கொள்வார்கள். சரியாக விஷயம் அறியாதவர்களும், அல்லது குறைவான விஷய ஞானமுள்ளவர்களுமான இளைஞர்கள் புராண பாத்திரங்களுள்ள கதைகளைக் காணும் போது இதுவே வியாஸரோ, வால்மீகியோ எழுதிய மூலம் என்று தப்பாக நினைத்து விடுவார்கள்.

எனவே, என் கருத்தில் புராணத்தை நவீனக் கதை இலக்கியத்திலிருந்து தனியாகவே வைத்திருக்க வேண்டும்.

# திருச்சியில் தி. மு. க.

“‘இந்தியாவில் உள்ள யாரையும் பட்டினியால் சாகவிட மாட்டோம்’ என்று அமெரிக்காவிலுள்ள ஜான்ஸன் அபயக் குரல் கொடுக்கிறார். இந்த உறுதிமொழியை நமது பிரதமர் கொடுக்காமல் ஜான்ஸன் கொடுக்கிறார். இந்த நிலைமை யாரால் ஏற்பட்டது? ஏன் ஏற்பட்டது? எப்படி ஏற்பட்டது?— இந்தக் கேள்விகளில் ஒரு கேள்விக்கு விடை கண்டாலும் போதும் இந்த ஆட்சியை மாற்றுவதைத் தவிர வேறு மார்க்கமில்லை; வேறு வழியில்லை.”

மேற்கண்டவாறு பேசியிருப்பவர் ஒரு சுதந்திரக் கட்சித் தலைவரோ என்று யாரும் எண்ணக் கூடும். இப்படிப் பேசியிருப்பவர் தி. மு. க. தலைவர் திரு ஸி. என். அண்ணாதுரை அவர்களே ஆவார்.

திருச்சியில் நடைபெற்ற தஞ்சை, திருச்சி மாவட்ட தி. மு. க. மகாநாடு மிக மிகச் சிறப்பாக நடைபெற்றது என்று இன்று தமிழகமெங்கிலும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஆட்சியாளர்களின் முறை தவறிய நிர்வாகத்தால் விலைவாசி உயர்வதையும், இந்தி ஆட்சிமொழியாகிக் கொடுமைப் படுத்துவதையும் பாமர மக்களும் புரிந்து கொள்ளும் வகையில் நையாண்டி வேடங்கள் அணிந்தும் சித்திரப் பதுமைகள் அமைத்தும் தி. மு. க. வினர் ஊர்வலம் விட்டார்கள். இவை யெல்லாவற்றையும்விட, முதல் நாள் மழை பெய்து மாநாட்டுப் பந்தல் சரிந்து போனதை இரவுக்கிரவே வேலை செய்து புனர் நிர்மாணம் செய்த விந்தையைத் தமிழகம் இன்னும் வியந்தவண்ணம் இருக்கிறது. இப்படிப்பட்ட அன்பர்களும் தொண்டர்களும் அடுத்த தேர்தலில் காங்கிரஸைப் பதவியினின்று சரியச் செய்வது உறுதி என்ற எண்ணம் தமிழ்கூறும் நல்லுலகமெங்கும் ஏற்பட்டுள்ளது.

# மறக்க வொண்ணாத மகாநாடு



ஜூன் மாதம் 13ந் தேதி மாலை மயிலை பி. எஸ். ஹைஸ்கூல் உயர்நிலைப் பள்ளி மைதானத்தில் காணக் கிடைக்காத ஒரு காட்சியைக் கண்டோம். ஸ்ரீ காஞ்சி சங்கராசாரிய சுவாமிகள், புதுப் பெரியவர்கள், தருமபுரம் மகாசந்நிதானம், திருப்பனந்தாள் தம்பிரான், மதுரை ஞானசம்பந்த மட ஆதீனகர்த்தர், காஞ்சி ஞானப்பிரகாச மடாதிபதிகள், குன்றக்குடி அடிகளார், கோவை கௌமார மடத்து அதிபர், திருவண்ணாமலை ஈசான்ய மடாதிபதிகள், மயிலம் சிவஞான பாலய சுவாமிகள் ஆகியோர் ஒரே மேடையில் வீற்றிருக்கும் அற்புதக் காட்சி அன்று பல்லாயிரக்கணக்கானவர் பார்வைக்குக் கிடைத்தது. இதற்கு ஏற்பாடு செய்த அறநிலைய ஆணையாளர் திரு சாரங்கபாணி முதலியாரும், பேரவைக்கு ஊக்கம் தந்ததோடு கூட்டத்திலும் கலந்து கொண்ட முதன் மந்திரி பக்தவத்சலம் அவர்களும் பாராட்டுக்குரியவர்கள்.

இந்து சமயத்தில் பிறந்தவர்களுக்குப் போதிய மத உணர்ச்சியை ஏற்படுத்தும் பணியில் தனித் தனியே இயங்கிவரும் பல சம்பிரதாயங்களைச் சேர்ந்த மடங்களும் தற்போது இன்னமும் சக்தி வாய்ந்த முறையில் ஒன்று சேர்ந்து, தமிழ்நாடு தெய்விகப் பேரவை என்ற பெயரில் சமயப் பிரசாரம் செய்ய முற்பட்டிருக்கிறார்கள். கிராமங்கள் தோறும் வழிபாடு, நித்தியப்படி நாமஜபம், சமயச் சார்புள்ள கலை நிகழ்ச்சிகள் நடத்துவது ஆகியவை சங்கத்தின் நோக்கங்கள். ஏழை எளியவர்களுக்கு உதவியாக வைத்திய சாலைகள், அநாதை இல்லங்கள் ஆகியன அமைப்பதற்கும் பேரவை முன்வந்திருப்பது குறிப்பிடத்தக்கது. மேலே கூறிய மடத்து அதிபர்கள் தவிர மைசூர் ராகவேந்திர















சுவாமி மடம், உடுப்பி வியாஸ மடம், திருக்குறுங்குடி ஸ்ரீ வைஷ்ணவ மடம் ஆகியவற்றின் பிரதிநிதிகளும் 13ந் தேதி காலை நடந்த பிரத்தியேகக் கூட்டத்தில் கலந்து கொண்டனர். முதலாண்டுத் தலைவராகத் தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிய பரமாசாரிய சுவாமிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

மாலை பொதுக்கூட்டத்தில் மடாதிபதிகள் அருளுரை வழங்கினர். மடாதிபதிகளின் பேரவைக்கு மக்கள் ஆங்காங்கு சிற்றவை அமைத்துப் பலம் தர வேண்டும் என்று கூறிய ஆசாரிய சுவாமிகள், இம்மாநாட்டுக்கு வந்ததன் அடையாளமாகத் தினந்தோறும் செய்ய வேண்டிய ஒரு நற்பணியில் மக்களை ஈடுபடுத்தினர். 'ஒவ்வொரு குடும்பத்தினரும் பிரதிதினமும் ஒரு செம்பிலோ சட்டியிலோ ஒரு பிடி அரிசியும் ஒரு நயாபைசாவும் போட்டு வரவேண்டும். பாத்திரம் நிரம்பியவுடன் அதை அருகில் உள்ள ஆலயத்துக்கு அர்ப்பணிக்க வேண்டும். இது போல் ஒவ்வொரு குடும்பமும் அளிக்கும் அரிசியையும் காசுகளையும் கொண்டு அன்னம் வடித்துத் தயிர் சாதமாகவோ, மிளகு உடைத்துப் போட்ட சாதமாகவோ நிவேதனம் செய்து, பின்னர் அதைப் பட்டை போட்டு ஏழைகளுக்குப் பத்து பைசா வீதம் விற்கவேண்டும்' என்பது பெரியவர்களுடைய விருப்பம். இதனால் தரித்திர நாராயண சேவை நடப்பதோடு கோயில்களில் மக்களுக்கு ஓர் ஈடுபாட்டு உணர்ச்சி உண்டாகி அவை நன்கு பராமரிக்கப்படும். எளிய முறையிலேயே சமூகம், சமயம் இரண்டுக்கும் சேவை செய்ததாகி விடும்.

இதோடு, அன்று அருளுரை தந்த மடாதிபதிகள் அனைவரும் கூறியதுபோல் தினமும் சிறிது போதேனும் பகவந்நாமத்தைச் சொல்லி வந்தால், தேசத்துக்கு ஒரு குறைவும் வராது. எல்லாரும் க்ஷேமமாக இருப்பார்கள்.








## 7. பரமன் பணிக்கு ஒரு பரவை

இசையில் மிகவும் வல்லமை பெற்றிருந்தார் பரவையார். நாடோறும் தோழிகளுடன் வான்மீகநாதரை உள்ளங் குழைந்து உருகி வழிபாடு புரியும் நியமம் உடையவர்.

ஒரு நாள் பரவையார் தோழியர் சூழ, வானிலிருந்து இறங்கிய மின்னற் கொடி போல் திருக்கோயிலுக்கு வந்தார். அடியார்கள் சூழச் சுவாமி தரிசனம் செய்ய வந்த சுந்தரர் பண்டை ஊழ் கூட்டுவிக்கப் பரவையாரைப் பார்த்தார். அக்கணமே காதல் வெள்ளம் கரைபுரண்டு ஓடியது.

**கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன்**
**பெருவாழ்வோ**
**பொற்புடைய புண்ணியத்தின்**
**புண்ணியமோ புயல்சுமந்து**
**விற்குவளை பவளமலர் மதிபூத்த**
**விரைக்கொடியோ**
**அற்புதமோ சிவனருளோ அறியேனென்**
**றதிசயித்தார்.**

கற்பகத்தின் பூங்கொம்போ என்பதற்குத் தெய்வயானை என்று சிலர் தவறாகப் பொருள் சொல்கிறார்கள். தெய்வயானை யென்றால் வணங்கத் தோன்றுமே யன்றி விருப்பத்துடன் பார்க்கத் தோன்றாது. கற்பக மரத்தின் பூங்கொம்போ? என்று கருதினார். ''மலர்மிசை வாழும் பிரமன் அரிதின் முயன்று செய்த மணிவிளக்கோ? உலகம் மூன்றும் செய்த புண்ணியத்தின் புது மலரோ? என்னையாட்கொண்ட எந்தை பிரான் திருவருளோ?'' என்று பலப் பல எண்ணி நின்றார்.

பரவையாரும் பண்டை விதி கூட்டுவிப்ப ஆரூரரை நோக்கினார்; கனவினுமிக்க கற்புடைய அம்மையின் உள்ளக் கோயிலுள் சுந்தரர் எழுந்தருளினார்.

**முன்னே வந்தெதிர்தோன்றும்**
**முருகனோ ! பெருகொளியால்**
**தன்னேரில் மாரனோ ? தார்மார்பின்**
**விஞ்சையனோ ?**
**மின்னேர்செஞ் சடையண்ணல்**
**மெய்யருள் பெற்றுடையவனோ ?**
**என்னையென் மனந்திரிந்த இவன்**
**யாரோ ? எனநினைந்தார்.**

''என் மனத்தை இதுவரை யாரும் கவரவில்லை. இவரைப் பார்த்ததும் இரும்பாயிருந்த என் மனம் வெண்ணெயாய் உருகி விட்டதே! வெறும் அழகைக் கண்டு மயங்காத என் உள்ளம் இவரைக் கண்டு உருகுமானால் இவர் முன்னே வந்தெதிர் தோன்றும் முருகனோ?'' என்று உள்ளம் பறி கொடுத்துப் பரமனைச் சேவிக்க உட்புகுந்தார் பரவையார்.

தம்பிரான் தோழர் அருகில் இருந்த அடியவர்களை, ''இந்தப் பெண் யார்?'' என்று வினவினார்.

''சுவாமி! இப்பெண்ணின் பெயர் பரவை. சிவபெருமானுக்கே கலையை அர்ப்பணித்த உருத்திர கணிகையர் தேவர்களும் தொடர்கரியவர்'' என்றனர். சுந்தரர் திருக்கோயிலுட் சென்று சிவபெருமானைத் தொழுதார். பிறகு பரவையாரைத் தேடினார். 'எந்தையாரருள் எந்நெறிச் சென்றதே' என்று வாடினார். கோயிலைச் சேர்ந்த தேவா



சிரிய மண்டபத்துக்குப் போய், 'பரம னார், பரவையைத் தருவார்' என்று இருந்தார்.

பரவையார் வேறு வழியாகத் தமது இருக்கை சேர்ந்தார். பரவையாம் அமுதினைத் தர வேண்டிக் கடலைக் கடையச் செல்வது போல் கதிரவன் மேற்கடலில் புகுந்தான். அஞ்செழுத் தினை நினையாத வஞ்சகர் நெஞ்சம்போல் உலகம் இருள் சூழ்ந்தது. திருநீற்றின் திருவொளி போல் திங்கள் தோன் றியது. திங்களும் தென்றலும் சுந்தர ருக்குத் துன்பம் செய்தன.

**பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடைச்**
**சிறந் தணைந்தது தெய்வநீர் நாட்டினில்**
**புறம் பணைத்தடம் பொங்கழல் வீசிட**
**மறம் பயின்றதெங்கோ தமிழ் மாருதம்?**

''ஏ, தமிழ்த் தென்றலே! இந்தக் கொடுமையை நீ எங்கே கற்றுக் கொண்டாய்?'' என்று கூறி வருந்திக் கொண்டிருந்தார்.

பரவையார் தமது திருமாளிகை வந்து சேர்ந்து நிலா மாடத்தில் மலர்ப் பள்ளி மேல் வைகி ஆரூரரை யெண்ணி அயர்ந்தார். அருகிலிருந்த சேடியை நோக்கி, ''நாம் கோயிலில் கண்ட அருளாளர் யார்?'' என்று கேட்டார். அவள் பரவையாரைத் தொழுது, ''அம்மையே! இருவரால் தேடப்பட்டும் கிடைக்காத ஒருவர் வலிதில் ஆட்கொண்ட சைவ முதல் திருத்தொண்டர்; தம்பிரான் தோழர்; திருநாவலூர் ஆதிசைவர்'' என்று கூறினள். அதனைக் கேட்ட பரவை யார், ''ஆகா! அவர் எம்பிரானுக்கு இவ்வளவு உகந்த தமரோ?'' என்று கேட்டு மேலும் அன்பு வளர விரகத்தில் கலங்கினர்.

இருவரையும் இம்மண்ணுலகில் பிறக்குமாறு கட்டளையிட்ட இறைவர் அன்றிரவே, அடியவர் கனவில் தோன்றி ''நாமே பரவையைச் சுந்தரனுக்கு மணஞ் செய்மின்'' என்று பணித்தருளி னார். நம்பியாரூரர்பால் வந்து, ''நங்கை பரவையை உனக்கு மணஞ் செய்யுமாறு அடியவர்க்கு ஆணையிட் டோம்'' என்று அருளிச் செய்தார். பின்னர் பரவையார் முன்னிலையில் தோன்றி, ''நானே உன்னை நம்பியாரு ரன் மணங்கொள்வான்'' என்று அருள் புரிந்தார். முன்பு முறைப்படி நடக்க விருந்த திருமணத்தைக் கிழவராக வந்து தடை செய்த அவரேதான் இப் போது இந்தத் திருமணத்துக்கு ஏற்பாடு செய்தார்! கயிலைக் கமலினியையும் ஆலால சுந்தரரையும் மறவாது, தம் வாக்கைக் காக்க முற்பட்ட வள்ள லன்றோ அவர்?

மறுநாள் விடியற்காலையில் தொண்டி யார்கள் அரனார் ஆணையின்வண்ணம் தம்பிரான் தோழராகிய நம்பியாரூர ருக்கு நங்கை பரவையாரை விதிப்படி சிறப்பாகத் திருமணம் செய்து வைத் தார்கள்.

ஆரூரர் தமதருமை மெல்லிய லாருடன் அன்பினுற் கலந்து மகிழும் நிலையிலேயே, ''பன்னாளும் பயில்யோகப் பரம்பரையின் விரும்பி'' சிவனருட் கடலில் திளைத்து இன்புறும் சிவ யோகச் செல்வராய்ச் செந்தமிழ்ப் பாமாலைகள் பாடிச் சிவபெருமானைப் போற்றி மகிழ்ந்தார்.

இறைவனைத் திருமேனி தாங்கும் சகளமூர்த்தியாகப் பாவித்து அன்பு பூணும் சரியை — ஆலயத்திலுள்ள அச் சகளத் திருமேனியை ஆகம முறைப்படி வழிபடும் கிரியை — இறைவனைச் சூக்கும மாக உள்ளத்தில் பாவிக்கும் யோகம்— உருவம் கடந்த நிலையில் இறைவனை அநுபவிக்கும் ஞானம் எனச் சைவ நெறி நான்கு மார்க்கங்களைக் கூறும்.

ஞானத்தில் சரியை அப்பர். ஞானத் தில் கிரியை சம்பந்தர். ஞானத்தில் யோகம் சுந்தரர். ஞானத்தில் ஞானம் மாணிக்கவாசகர். ஆக, ஞானத்தின் பதினைந்தாவது படியில் இருந்த சுந்த ரர் பரவையாருடன் வீட்டில் சிவ யோகம் பயில்கிறாராம்!

திருவாரூரில் கோயில் கொண் டருளிய பெருமான், அன்புடைத் தோழராய் வந்து தோன்றிப் பரவை யாரை வாழ்க்கைத் துணையாகத் தந் தருளிய திருவருட் திறத்தை,

**ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா**
**யென்னுடைய**
**தோழனுமாய் யான்செய்யுந் துரிசுகளுக்**
**குடனாகி**
**மாழையொண்கண் பரவையைத்தந்**
**தாண்டானை மதியில்லா**
**ஏழையேன் பிரிந்திருக்கேன் என்னாரூ**
**ரிறைவனையே**

என்று உளம் கசிந்து உரைக்கின்றார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

ஒரு நாள் அன்பர் புடைசூழ நம்பியாரூரர் திருமணக் கோலமும் சைவத் திருக்கோலமும் கலந்து மிளிரத் திருக்கோயிலை யடைந்தார். அங்குள்ள தேவாசிரிய மண்டபத்தில் சிறந்த திருத்தொண்டர்கள் கூடியிருப்பதனைக் கண்டார். ''இத்திருத் தொண்டர் கட்கு அடியேன் தொண்டனாக ஆகும்

நீங்கள்
பொலிவுடனிருக்க
சார்மிஸ்
உபயோகியுங்கள்!




## புதுமை பெறுக... இதம் பெறுக...
## நாள் முழுவதும் நளினமாய் இருங்கள்!

நாள் முழுவதும் நளினமாய் இருக்க, புதிய சார்மிஸ் உபயோகித்து குளுமையையும், புத்துணர்ச்சியையும் பெறுங்கள். பளபளப்பான, புதிய டின்னில் உள்ள சார்மிஸ், வியக்கத்தக்க வகையில் உங்களுக்குப் புத்துணர்ச்சியளித்து உங்கள் அழகைச் சோபிக்கச் செய்யும் அந்த உன்னத மனோரம்மிய நறுமணத்தைக் கொடுக்கிறது.

# சார்மிஸ்

உன்னத மனோரம்மிய மணத்துடன் கூடிய
டால்கம் பவுடர்

நாள் என்றோ?'' என்று எண்ணி ஏங்கி உள்ளே சென்று, இறைவனது திருவடிகளை வாழ்த்தி வணங்கினர். கண்ணுதற் கடவுள் அவருக்குக் காட்சி தந்து, ''சுந்தரனே! நமது அடியவர் பெருமையைக் கேள்'' என்று எடுத்துரைத்தார்.

'' பெருமையால் தம்மை ஒப்பார் ;
பேணலால் எம்மைப் பெற்றார் ;
ஒருமையால் உலகை வெல்வார் ;
ஊனமேல் ஒன்றும் இல்லார்;
அருமையாம் நிலையில் நின்றார் ;
அன்பினால் இன்பம் ஆர்வார் ;
இருமையும் கடந்து நின்றார் ;
இவரை நீ அடைவாய் '' என்று.

'' நமது அடியவர்களை வணங்கி அவர்கள் மீது பதிகம் பாடு'' என்று பணித்தருளினர் சிவபெருமான். அப்பணியினைத் தலைமேற் கொண்ட சுந்தரர், பெருமானைப் பணிந்து, ''எம்பெருமானே! திருத்தொண்டர்களது பெருமை இத்தன்மையது, இன்ன பண்புடையது என்று எவ்வாறு சிறியேன் உணர்ந்து பாடுவேன்? இதற்குரியவன் யானோ? அடியார்களது புகழை விரித்துரைக்கும் திருப்பதிகத்தினைப் பாடும் பரிசினை அருள்வீர் '' என்று வேண்டினர். அப்போது பரம் பொருளே ''தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்'' என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந்தருளினர். மறையாயிரம் மொழிந்த மலர் வாயால் அடியெடுத்துக் கொடுக்கப் பெற்ற ஆரூரர், தேவாசிரிய மண்டபம் போய் அங்கு குழுமியிருந்த சிவனருட் செல்வர்களைப் பன்முறை பணிந்து, கண்ணீர் சொரிந்து, ''திருத்தொண்டத் தொகை'' என்னும் திருப்பதிகத்தை இனிது பாடினர்.

**தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும்
அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனுர்க்கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கு
மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு
மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்
கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார்
விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்
கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.**

இவ்வாறு அறுபத்தி மூன்று நாயன்மார்களுக்கும், தொகையடியார்களுக்கும் தாம் அடிமை; அவர்களது அடிமைக்கும் அடிமை என்று பதிகம் பாடி எளிமையால் உயர்ந்தார் சுந்தரர். இறைவன் அடியெடுத்துத் தந்து அவர் பாடிய அந்தச் சிவனடியார் அனைவரின் சரித்திரங்களையும் திரட்டித் தருவதுதான் பெரிய புராணம்.

சிவனடியார் உளம் மகிழ அவர்தம் திருக்கூட்டத்தின் நடுவே திருவாரூரில் நாள்தோறும் முப்போதும் தியாகேசப் பெருமானை வழிபட்டுக் கொண்டு வந்தார் நம்பியாரூரராகிய சுந்தரர்.

அரனுர்க்கு ஆட்பட்டு அவனருளால் அவனுடைய திருத்தொண்டர்களாகிய சிவனருட் செல்வர்களுக்கு ஆட்பட்டு உய்ந்த திறத்தினை,

**'' ஆட்டான் பட்டமையால்
அடியார்க்குத் தொண்டுபட்டு''**

என்றும்,

**'' பண்டே நின்னடியேன் அடியாரடி
யார்கட்கெல்லாந்
தொண்டே பூண்டொழிந்தேன் ''**

எனவும் நம்பியாரூரர் தெளிவாகக் கூறியுள்ளார்.

திருத்தொண்டர்களையும் அவர்தம் திருக் கூட்டத்தினையும் போற்றுவது திருத்தொண்டத் தொகை என்னும் இத்திருப்பதிகமாகும். இதனைத் ''தென் தமிழ்ப் பயனும் வந்த திருத்தொண்டத் தொகை'' எனச் சேக்கிழார் பெருமான் போற்றியுள்ளார். நம்பியாரூரர்

## ஒரு டிக்கெட் !



பெரம்பூர் நோக்கிச் செல்லும் ஏழாம் நம்பர் பஸ் சென்ட்ரல் ஸ்டேஷன் ஸ்டாப்பிங்கில் நின்று புறப்பட்டது.

பெண்கள் வரிசையில் ஒரு பெண், கண்டக்டரிடம் ஒரு ரூபாய் நோட்டைக் கொடுத்துவிட்டு, ''புவனேசுவரி ஒன்று'' என்றாள். டிக்கட்டைக் கிழித்துக் கொடுத்து விட்டுச் சில்லறையை எண்ணிக் கொண்டிருந்தார் கண்டக்டர். அப்போதுதான் பக்கத்தில் இன்னொரு பிரயாணி சாவதானமாகத் தம் மடியில் இருந்த முடிச்சை அவிழ்த்துக் கொண்டிருந்தார். கண்டக்டர் அருகில் நெருங்கியதும் பவ்வியமாக ரூபாய் நோட்டைக் கொடுத்து, ''பெரியசாமி ஒண்ணு'' என்றார் அந்த நாட்டுப்புறத்துப் பிரயாணி. இதைக் கேட்டுக் கொண்டிருந்த பிரயாணிகள் ஏன் சிரித்தார்கள் என்பது கண்டக்டர் விளக்கிய பின்புதான் புரிந்தது அந்தப் பெரியசாமிக்கு. உங்களுக்குப் புரிகிறதோ? அந்த அம்மாள் குறிப்பிட்டது புவனேசுவரி சினிமா தியேட்டரை.

-இ. குமரராசு

## சிந்தனைத் துளி!

கண்ணுக்குப் புலப்படாத அளவு சிறிய கிருமி என் விரல் நுனியில் உட்காருகிறது. அதற்கு நான் பெரிய மலை என்றுதான் தோன்றும். விநோபாவின் விரல் என்று தோன்றாது. என்னைத் தொட முடிந்தாலும், அது என்னைக் கண்டுகொள்ள முடியாது. அதே போல் நாம் இறைவனை உணரலாம். ஆனால் அவன் உருவைக் கண்டுகொள்ள முடியாது. நாமே இறைவனில் அடக்கம் என்பதால், அவனைக் கண்டுகொள்ளும் பிரச்சினையே எழுவதில்லை.

- விநோபா

இந்தத் திருப்பதிகத்தினைப் பாடியருளிய தற்குக் காரணகர்த்தராக விளங்கியவர் விறன்மிண்ட நாயனார் எனக் கூறுகின்றார் சேக்கிழார் பெருமான்.

**"வேறுபிரிதென் திருத்தொண்டத்**
**தொகையானுலகு விளங்கவரும்**
**பேறுதனக்குக் காரணராம் பிரானார்**
**விறன்மிண்டரின் பெருமை**
**கூறுமளவென் னளவிற்றே."**

சுந்தரர் பரவையாருடன் திருவாரூரில் தங்கியிருந்த போது குண்டையூர்க் கிழார் என்பவர் நம்பியாரூரரிடம் அன்பு பூண்டு, அவரும் அடியாரும் அமுதுசெய்யும் பொருட்டு, பரவையார் வீட்டுக்கு நெல்லும், பருப்பும், சர்க்கரையும் பிற உணவுப் பொருள்களும் தந்து தொண்டு செய்து வந்தார். இப்பணி இடையறாது நடந்து வருங்கால் உரிய காலத்தில் மழையின்றி எங்கும் பஞ்சம் ஏற்பட்டது. வயல்கள் விளையாமையால் குண்டையூர்க்கிழார் வழக்கம்போல் சுந்தரருடைய அமுதுக்கு நிரம்ப உணவுப் பொருள்கள் வழங்குவதற்கு முடியாது ஒரு நாள் மிகவும் உள்ளம் வருந்தி உணவின்றி உறங்கினார். சிவபெருமான் அவரது கனவில் தோன்றி, "சுந்தரன் பொருட்டு உனக்கு நெல் தந்தோம்" என்று அருளிச் செய்து, குபேரனை ஏவினார். அவ்வாணையின் வண்ணம் குபேரன் குண்டையூர் முழுவதும் மலை போல் நெல் குவிந்திடச் செய்தான். பொழுது விடியும் பொழுது குண்டையூர்க் கிழார் எழுந்து, நெல் மலையைக் கண்டு அதிசயித்தார்; சிவபெருமான் திருவருளையும் நம்பியாரூரரின் பெருமையையும் வியந்து போற்றித் துதித்தார். "எம்பெருமான் சுந்தரர்க்கு அருளிய இந் நெல் மலையை எவ்வாறு யாரைக் கொண்டு எடுத்துச் செல்வது?" என்று திகைத்தார். இவ்வதிசயத்தைச் சுந்தரர்க்குத் தெரிவிக்கும் பொருட்டுத் திருவாரூரை நோக்கிச் சென்றார். இதற்குள் குண்டையூரில் நெல்மலை அளிக்கப் பெற்றுள்ளதெனச் சிவபிரானே அறிவிக்க அறிந்த சுந்தரர், குண்டையூரை நோக்கி வந்தார். வழியிலே சுந்தரரைக் கண்ட குண்டையூர்க் கிழார் அவரைத் தம் ஊருக்கு அழைத்துச் சென்றார். ஆரூரர் குண்டையூர் போய், பொன்மலையுடைய புராதனர் அளித்த நெல்மலையைப் பார்த்து இறைவன் திருவருளை வியந்தார். "இங்கு நெல்மலையைக் குவிந்திடச் செய்த சிவபெருமானே! இதனை எடுத்துச் செல்வதற்குரிய ஆட்களையும் தந்தாலன்றி இதனை எடுத்துச் செல்லுதல் இயலாது" என்று எண்ணி அருகிலுள்ள கோளிலி என்ற திருத்தலத்துக்குச் சென்று, நெல்லினைத் திருவாரூருக்குக் கொண்டு போய்ச் சேர்க்குமாறு திருப்பதிகம் பாடியருளினார்.

**"நீள நினைந்தடியேன் உமை**
**நித்தலுங் கைதொழுவேன்**
**வாளன கண்மடவாள் அவள்**
**வாடி வருந்தாமே**
**கோளிலி யெம்பெருமான்**
**குண்டையூர்ச்**
**சிலநெல்லுப் பெற்றேன்**
**ஆளிலை எம்பெருமான் அவை**
**அட்டித் தரப்பணியே."**

இப்பதிகம் பாடி முடித்ததும் விடையவர் திருவருளால், "இன்றிரவு நமது பூதங்கள் பரவை வீடு மட்டுமன்றித் திருவாரூர் முழுவதும் நிறையுமாறு நெல்மலையைக் கொணர்ந்து சேர்க்கும்" என்று வானில் ஓர் ஒலி எழுந்தது. தம்பிரான் தோழர் எம்பிரானை வணங்கித் திருவாரூர் சேர்ந்தார்.

அன்றிரவே பூதகணங்கள் நெல் மலையை எடுத்துப் பரவையார் வீட்டினை நிறைத்து, திருவாரூர் வீதிகளையும் நிரப்பி விட்டன. மறு நாள் துயிலுணர்ந்து எழுந்த பரவையார், தம் மாளிகையிலும், திருவாரூர் வீதிகளிலும் நெற்குவை நிரம்பியிருப்பதைக் கண்டு, திருவருளின் தன்மையை அதிசயித்தார். ஊர் முழுவதும் நெற்குவியல்களைக் கண்ட ஊரில் உள்ளார், "இந் நெற்குவை நம்பியாரூரர் பரவையார்க்கு அளித்தது" எனத் தேர்ந்து அற்புதம் எய்தினர். அவரவர் வீட்டின் எல்லைக்குள் உள்ள நெற்குவியலை அவரவர்களே எடுத்துக் கொள்ளலாம் என்று பரவையார் ஊர் முழுதும் பறையறிவித்தனர். திருவாரூர் மக்கள் அனைவரும் திருவருளையும் பரவையாரது பரிவையும் புகழ்ந்து போற்றினார்கள்.



★ எம். ஜி. ஆர்., டாக்டர், வக்கீல், சி.ஐ.டி., இன்ஸ்பெக்டர் போன்ற பல வேஷங்களில் நடித்திருக்கிறார். ஆனால் அவர் சமூகப் படங்களில் ஒரே ஒரு வேடத்தில் மட்டும் நடிக்க வில்லை. அவர் நடிக்காத அந்த வேடத்தில் திரு சிவாஜி கணேசனும், திரு ஜெமினி கணேசனும் ஆளுக் கொரு படத்தில் நடித்திருக்கிறார்கள். எம். ஜி. ஆர். தாங்காத அந்த வேடம் என்ன ?

★ ''நான் ஆணையிட்டால்'' என்ற சினிமா விளம்பரத்தைப் பார்க்கும் பொழுது நமக்கு, ''நான் ஆணை யிட்டால், அது நடந்துவிட்டால்'' என்ற 'எங்க வீட்டுப் பிள்ளை' படப் பாட்டு நினைவுக்கு வருகிறது அல் லவா? அதைப் போல் கீழே சில படங் களின் பெயர்களைக் கொடுத்திருக்கி றோம். நீங்கள் பாட்டின் பெயரையும், அந்தப் பாட்டு எந்தப் படத்தில் வரு கிறது என்பதையும் கண்டுபிடியுங்கள்.

1. காத்திருந்த கண்கள்; 2. குமரிப் பெண்; 3. ஆலயமணி; 4. அந்த நாள்; 5. வண்ணக் கிளி; 6. மனிதன்; 7. நீ.



★ எஸ். எஸ். ராஜேந்திரன், ஜெமினி கணேசன், எம். ஜி. ஆர். ஆகியோர்கள் வில்லனாக நடித்திருக்கி றார்களா? அப்படியானால், எந்தப் படத்தில் நடித்திருக்கிறார்கள்?

**விடைகள்:**



★ நீதிபதி வேடம் இதுவரை எம். ஜி. ஆர். தாங்கவில்லை. சிவாஜி கணேசன் 'அவள் யார்?' படத்திலும், ஜெமினி கணேசன், 'நீதிபதி' படத்தி லும் நீதிபதியாக நடித்துள்ளார்.

★ காத்திருந்த கண்கள்: ''காத் திருந்த கண்களே '' — மோட்டார் சுந்தரம் பிள்ளை.

குமரிப் பெண்: ''குமரிப் பெண் ணின் உள்ளத்திலே '' — எங்க வீட் டுப் பிள்ளை.

ஆலயமணி: ''ஆலய மணியின் ஓசையை நான் கேட்டேன்'' — பாலும் பழமும்.

அந்தநாள்: ''அந்த நாள் முதல் இந்த நாள் வரை'' — பாவமன்னிப்பு.

வண்ணக்கிளி: ''வண்ணக் கிளி சொன்ன மொழி என்ன மொழியோ'' — தெய்வத் தாய்.

மனிதன்: ''மனிதன் என்பவன் தெய்வமாகலாம்'' — சுமைதாங்கி.

நீ: ''நீ என்பது என்ன'' — வெண் ணிற ஆடை.



★ எஸ். எஸ். ராஜேந்திரன்: ''ராஜாமணி''; ஜெமினி கணேசன்: ''தாயுள்ளம் ''; எம். ஜி. ஆர். : ''பணக்காரி'' — ச. ரங்கநாதன்



லண்டன் நகரில் உள்ள இஸ்ரேல் என் பவரிடம் விக்டோ ரியா மகாராணியின் ஓவியம் ஒன்றிருக் கிறது. இந்த ஓவியம் 1,73,000 எழுத்துக் களைக் கொண்டே உருவாக்கப்பட்டது. இந்த ஓவியத்தில் அரசியின் சரித்தி ரமே எழுதப்பட்டுள் ளதாம். மூன்றடி நீளமும் இரண்டரை அடி அகலமும் கொண்ட இந்த ஓவி யம் 1857ம் ஆண்டு ஜூன் மாதம் 22ந் தேதி நடைபெற்ற விழாவுக்கென அவ ருடைய பாட்டனு ரால் உருவாக்கப்பட் டது. இதனை உரு வாக்க நான்கு ஆண் டுகளும், ஏழு மாதங் களும் பிடித்தன.

தகவல்: குடந்தை மோகன்



## குதிரைப் பிரசாரம்!

ஒரு சர்வதேசக் குதிரைப் பந்தயத்தில் ஒரு அமெரிக் கக் குதிரையும் ஒரு ரஷ்யக் குதிரையும் மட்டுமே கலந்து கொண்டன. அதில் அமெ ரிக்கக் குதிரை வெற்றி பெற்று விட்டது. இந்த விஷயம் ஒரு ரஷ்யப் பத்திரி கையில் பின்வருமாறு பிர சுரிக்கப்பட்டிருந்தது :

''புகழ்மிக்க ரஷ்யக் குதிரை இரண்டாவதாக வந்தது. அமெரிக்க முத லாளித்துவக் குதிரை, கடை சியாக வந்த குதிரைக்கு முன்னதாக வந்தது.''

- எம். ... (



## யார் இந்தக் கோடீசுவரர்கள்?

கீழே குறிப்பிட்டுள்ள பொருள்களுக்கு உரிமையாளர்களான கோடீசுவரர்களை உங்களுக்குத் தெரியுமா?

1. 760 அறைகளைக் கொண்ட பெரிய மாளிகை யாருடையது?

2. இரண்டு லட்ச ரூபாய் பெறுமானமுள்ள நாற்காலியில் அமரும் அதிருஷ்டசாலி யார்?

3. வீட்டு வேலை செய்வதற்காக 200 வேலைக்காரர்களை வைத்துக் கொண்டு ஆண்டுக்கு 26 லட்சம் ரூபாய் அவர்களுக்குச் சம்பளம் கொடுப்பவர் யார்?

4. 12 கோடி ரூபாய் மதிப்புள்ள 6000 ஓவியங்களுக்கு அதிபதி யார்?

3. 380 கடிகாரங்களை வீட்டில் வைத்துக்கொண்டு அவைகளுக்குச் சாவி கொடுப்பதற்கென்றே தனி ஆள் வைத்திருப்பவர் யார்?

6. தமது மகளைப் பராமரிக்கமட்டும் 24 வேலைக்காரரை வைத்திருப்பவரைத் தெரியுமா உங்களுக்கு?

7. உலகிலேயே சிறந்த வைரங்கள் யாரிடமுள்ளன?

8. ஒரு லட்சத்து முப்பத்திரண்டாயிரம் ஏக்கர் நிலத்தை ஆளும் நிலப்பிரபு யார்?

9. 85 கோடி ரூபாய் சொத்துள்ள கோடீசுவரர் யார்? - வீ. சம்பந்தன்

விடை 41ம் பக்கம்

~~~~~~~~~~~~~~~~~~~~

பாதிரி சிறுமி ஒருத்தியிடம் கேட்டார்: ''பாப மன்னிப்புக் கோர நாம் என்ன செய்யவேண்டும்?''

சடாரென்று பதிலளித்தாள் சிறுமி: ''பாவம் செய்ய வேண்டும்!''

- மீனாட்சி நெல்லை

கல்கி 5-6-66 இதழ் பல்சுவைப் பகுதியில் ஸ்ரீ 'மேரு'வின் நகைச்சுவைக் கவிதையைப் படித்து மகிழ்ந்த (?) ஒரு பிரசுரகர்த்தர் இப்படிப் பதில் கூறுகிறார்:



# ஐயா, எழுத்தாளரே!

**எஸ். வி. ஆர்.**

கொக்கின் தலையில் குளிர்வெண்ணெய் வைத்துப்பின்
வக்கணையாய்ப் பிடிப்பது போல்
நல்லவரும் பொல்லாதவரும் நாலுபேர் அறியும்படி
இல்லாத பணத்துக்குப் பத்திரிகையில் தாக்கீது
பிறப்பிக்கும்
பொல்லாத எழுத்தாளரே! கேளும் என் கதையை!
குட்டிப் பதிப்பாளன் என்றாலும் குபேரன்தான் என்றுபல
மட்டிப்பயல்கள் நினைப்பதுபோல் நீரும் நினைத்துவிட்டீர்.
கொட்டியா வைத்திருக்கிறது. வாரிக் கொடுத்துவிட?
போதாத காலத்தின் பொல்லாக் கொடுமையினால்
ஏதோ எழுத்தாளர் நீர் எம்மிடம் வந்து நின்று
கெஞ்சிக் கூத்தாடி என் தலைக்கு ஐஸும் வைத்து
அஞ்சோ பத்தோ 'அட்வான்ஸ்' வாங்கிப் போனபின்னர்
ஓவியரை யழைத்து உம்முடைய படைப்பான
காவியத்துக்கோர் ஓவியம் தீட்டச் சொன்னால்
தீட்டினார் பாரும் நன்றாக என்னை! கொண்டு வந்து
நீட்டினார் நூற்றைம்பது ரூபாய்க்குப் பில்லை!
கொடுத்தழுதேன்; வேறென் செய்ய?
அட்டையிலே ஆரணங்கின் படம் போட்டு இள
வட்டங்களை ஈர்த்திழுக்கும் வியாபாரத் தந்திரம்
முட்டாளோ நான்? சேச்சே! [அறியாத
பிறகு — அரிய உம் இலக்கியத்தை அச்சிடவே
உரியதொரு நாள் பார்த்துக் கோள் பார்த்து
அச்சுக்குக் கொடுத்துவிட்டு அவர் கையில்
'வச்சுக்கும்' என்று சொல்லி வாய்க்கரிசி போடுவதுபோல்
வாரந் தவறாமல் நூறென்றும் இருநூறென்றும்
கணக்கணையாய்
வாரிக் கொடுத்துவிட்டு வயிற்றில் அனல் காத்து
ஆபீஸ் வாடகை, மின் செலவு, வாங்கிய கடனுக்குவட்டி
ஆக ஆயிரம் இனங்களுக்கு ஈடும் சால்ஜாப்பும் கொடுத்
புத்தகத்தை வெளிக் கொணர்ந்தால் — [துப்
ஐயகோ! என்னத்தைச் சொல்லுவேன்? காசு கொடுத்து
வாங்குவாரில்லை; புத்தகம் பழுப்பேறிப் புழுதி மிகப்
சிந்துவாரின்றிக் கிடந்த காலை — [படித்து
'அரசாங்க லைப்ரரியில் அடியேனின் வெளியீட்டை
* விரசாகவாங்கிப்போட விதிமுறைகள்செய்யவேணும்'
என்றெழுதி எப்போதோ நான் போட்ட கடிதத்துக்குப்
பதில்
சென்றவாரம் கிடைத்தது: புத்தகம் 'அப்ரூவ்'டாம்.
இனிநான் ஒவ்வொரு மாவட்டத்துக்குமெனத்
தனித்தனியே எழுதிக் கேட்டுத் தயவான பதிலும்பெற்று
உம் படைப்பை உரியவிடத்தில் சேர்ப்பித்துப் பில்லும்
போட்டு
'நம் பில் எப்போது பாசாகும்? என்றைக்குக் காசாகும்?'
என்று கேட்டு நூலக ஆணையாளரை நித்தமும்
சென்று வணங்கி, வாழ்த்துப் பாடி வலம் வரவேண்டும்.
உம்அதிர்ஷ்டம், உம்ராசி, நல்லபடி எல்லாம் இருந்தால்
எம்கைக்குப் பணம் ஏழெட்டு மாதத்தில்
[கிடைத்துவிடும்.







அது வரையில் —
போகாதீர்! சொல்லம்பு வீசாதீர்!
சொல்லி விட்டேன்! ஆளை விடும்!



* விரைவாக.
~~~~~~~~~~~~~~~~~~~~




சிப்பாய் ராஜாவாக வரும் ஜெமினி கணேசன் அதியற்புதமாக நடித்திருக்கிறார். ராமுவைப் பேச வைக்க எடுத்துக்கொண்ட முயற்சிகள் யாவும் தோல்வியடைந்து விடவே, ராஜா மனமுடைந்து ராமுவை அடித்து விடுகிறான். பேச முடியாத ராமு, ''எனக்குச் சாகத் தெரியவில்லையே, அப்பா!'' என்று மண்ணில் எழுதிக் காட்டுகிறான். அதைப் படித்து விட்டு ஜெமினி கணேசன் கதறுகிறார். நாமும் உருகி விடுகிறோம். புது முகம் மாஸ்டர் ராஜ்குமார் ராமுவாகவே மாறிப் பேசியும், பேசாமலும் நடித்து ரசிகர்களின் உள்ளத்தில் நிரந்தர இடம் பெற்று விட்டான். படத்தின் பிற்பகுதியில் வரும் கே. ஆர். விஜயா ஏற்ற பாத்திரம் உணர்ச்சி மயமானது; சிக்கலானது; லக்ஷ்மியின் மனம் ராஜாவினிடம் ஈடுபட்டது. ஆனால் ராஜா அவளை ஏற்கும் நிலையில் இல்லை. லக்ஷ்மி தன் உள்ளத்தைத் திறந்து காட்டியபோதெல்லாம் ராஜா தன் மன உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு மௌனமாகக் கண்ணீர் வடிக்கிறான். ஏமாற்றமடைந்த கே. ஆர். விஜயாவின் நடிப்பு எல்லாரையும் கண் கலங்க வைக்கிறது.

நாகேஷ், அசோகன், வி. கே. ராமசாமி ஆகியவர்கள் படத்தின் ஹாஸ்யப் பகுதியை நிரப்புகிறார்கள். இரண்டு தீ விபத்துக்கள் படத்தில் முக்கிய பங்கு வகிக்கின்றன. ஆரம்பத்தில் வரும் கொள்ளைக்காரர்களால் வைக்கப்பட்ட தீ, திரைக் கதையின் திரும்புமுனையாக அமைந்து ராமுவை ஊமையாக்குகிறது. கடைசியில் வில்லன் வைத்த தீ ராமுவைப் பேச வைத்து விடுகிறது. முதல் தீ விரைவில் அணைந்து திரைக்கதையை விறுவிறுப்பாக்குகிறது. ஆனால் கடைசித் தீ பொறுமையைச் சோதிக்கிறது. அந்தக் கட்டத்தைக் கணிசமாகக் குறைத்திருக்கலாம்.

''பச்சை மரம் ஒன்று'' என்ற பாட்டும், ''நம்பினோர் கெடுவதில்லை'' என்ற கண்ணனைப் பற்றிய பாட்டும் பசுமையாகக் காதில் ஒலித்தவண்ணம் இருக்கின்றன.

டைரக்டர் ஏ. சி. திருலோகசந்தர் படத்தைத் திறமையாக டைரக்ட் செய்திருக்கிறார்.

திரைக் கதை, வசனம் ஜாவர் சீதாராமன் எழுதியிருக்கிறார். வசனம் சுவையாயிருக்கிறது. ஏவிஎம்மின் தயாரிப்பான ''ராமு'' அருமையான குடும்ப சித்திரம்.

## ஆலமரம்



பேருக்கு ஏற்பப் பரந்து தழைத்தும் பல பாத்திரங்களுக்கும், பல சம்பவங்களுக்கும், பலவிதமான உணர்ச்சிப் போராட்டங்களுக்கும் இடம் தந்து நாடகம் செழிப்பாக வளர்ந்திருக்கிறது. பொறுப்பில்லாமல் சீட்டாடிப் பொழுதைக் கழிக்கும் ஒரு தந்தைக்கு மூத்த மகன் பொறுப்பில்லாமல் ஊர் சுற்றுபவனாக அமைந்து விட்டாலும், இளைய மகன் பொறுப்புள்ளவனாகவும் நற்குணமுள்ளவனாகவும் அமைந்து விடுகிறான்; அண்ணன் செய்துவிட்ட அடாத செயலையும் தான் ஏற்றுக்கொண்டு அவனும் திருந்த வழி செய்கிறான். குடும்பம் ஒன்றுபடுகிறது. ஆனால் இதையெல்லாம் பார்க்கத் தாயார் உயிருடன் இல்லை.

இளையவன் கோபுவாக நடிக்கும் ஏவி. எம். ராஜன் தம் பாத்திரத்தை உணர்ந்து உணர்ச்சிப் பிழம்பாய் அருமையாக நடிக்கிறார். கல்யாணியாக வரும் புஷ்பலதா காதலித்து, கண்ணீர் விட்டு, சிறுமையை எதிர்த்துச் சீறி அற்புதமாக நடிக்கிறார்.

கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய முக்கியமான மூன்று பொறுப்புக்களையும் ஏற்றிருப்பவர் எழுத்தாளர் 'பிலஹரி' -- இன்றைய சினிமா உலகை மனத்தில் கொண்டே நாடகத்தை எழுதியிருக்கிறார் போலும். நாடகம் சினிமா போலவேயிருக்கிறது.

''ஆலமரம்'' நாடகம் பல முறை நடத்தப்பட்டுப் பிரபலமாகி வருவதிலிருந்தே அதற்கு இருக்கும் வரவேற்பைத் தெரிந்து கொள்ளலாம்.



# ஜலதோஷம்!



'யாரோ ஒருவர்'



நமக்கு மூக்கு இருப்பது தெரிய வேண்டுமா, ஜலதோஷம் பிடிக்க வேண்டும். மூக்கையே திருகி எறிய வேண்டும் போல அத்தனை ஆத்திரம் வரவேண்டுமா, சளிப்பு பிடிக்க வேண்டும். நான் நேற்றுவரை — ஏன் காலை எழும்போதுகூட சுவாரசியமாக மூச்சு விட்டுக் கொண்டிருந்தேன். மழையிலோ, ஈரத்திலோ நடக்கவில்லை. ஜலதோஷம் பிடிக்கக் காரணங்களே இல்லை. கடந்த பல ஆண்டுகளாக நான் உண்ணும் பொருளை உண்ண வேண்டிய நேரத்தில் உண்டேன்; உறங்கினேன்; அலுவலக வேலை செய்தேன். இதைத்தான் நேற்றும் நிறைவேற்றினேன். எங்கிருந்து இந்தச் சனி வந்தது இறைவா?

இது. கடவுள் தந்த சாபத் தீ. ஆண்டவன் எனக்குத் தண்டனை தந்து விட்டான். என் மீது என்ன கோபமோ, அறியேன். வேறு தவறுகள், சுகாதாரக் கேடுகள் எதையும் நான் மனதாரச் செய்தவன் அல்ல. சனி பிடித்ததோ, சளி பிடித்ததோ என்று கூறுவது உண்மை. ஏழரை ஆண்டு காலம் என் பக்கமாகச் சனி பகவான் இருந்தபோது நான் மகிழ்வுடன் இருந்தவன்; நான் சனியைக் காப்பாற்றியவன்; ஏழரை நிமிஷங்களில் சளியை என்னுடன் வைத்துக் காப்பாற்ற முடியவில்லை. தூரத்துகிறேன். தூக்கி எறிகிறேன். சிலரிடம் கறுப்புப் பணம் பதுங்கிக் கிடக்கிறது போல் சளி என்னிடம் பதுங்கிக் கிடக்கிறது.

கட்டு விரலும் பெருவிரலும் சதா மூக்கை இறுக்கிப் பிடித்து வாரி எறிகின்றன. தொட்டி முற்றம்வரை போய்ப் போய்ச் சிந்தினேன். வர வரச் சிந்திய மூக்கும் அழுத கண்ணுமாக இருந்தவன், அலுத்துப் போனேன். தாழ்வாரம், அறை, இருக்குமிடம், உட்காரும் நாற்காலி என்று பார்க்காமல் கொட்டுகிறது. மேல் துண்டிலால் துடைக்கிறேன். கொட்டுகிறது. பனிக் காலத்திய பனியைப் போல் சளி கொட்டுகிறது. கடல் நீர் ஆவியாகி வான் வழியே வந்து கொட்டுவதற்கு மழை என்று கூறுவார்கள். மழைத் தண்ணீர் எங்கிருந்து எங்குற்றது என்பது சயன்சு படித்த நமக்குத் தெரியும். என் உடம்பில் கடல் உண்டா? அந்தக் கடலை எந்தச் சூரிய பகவான் குடித்தான்? எந்த வாயு பகவான் மூக மண்டலம் கொண்டு வந்து சேர்த்தான்? சே...சே... படுமோசம். முகமும் ஆப்பிள் பழமாகி மூக்கும் தொடவே முடியாத தக்காளி போலச் சிவந்து கனிந்து விட்டது. கண்களும் பழங்கள்தான். கோவைப் பழங்கள் போல் மாறி விழியாய் விழிக்கின்றன. மண்டைக்குள்ளாக ஏதோ சிறிய சப்மெரின் ஒன்று பழுதாகிக் கிடப்பது போன்று உணருகிறேன்.

என் வீட்டில் எத்தனை நிறக் கைக்குட்டைகள் எத்தனை வகை அகலங்களில் உண்டோ அத்தனையும் வெளி வந்து விட்டன. விதம் விதமான கைக்குட்டைகள் யாவும் குளங்களாயின. அப்புறம் கைக்குட்டைகள் கட்டுப்படியாகாது என்னும் நிலையில் சின்னஞ்சிறு துண்டுகள், டவல்கள், வெளியே புறப்பட்டன. பழந் துணிகள் தொடர்ந்து வந்தன. எப்போதும் துணியும் கரமுமாக இருந்தேன். இத்தனை தொல்லைகளுக்குள்ளும் துணிகரங்களுக்குள்ளும் பசி இருக்கிறதே அது மட்டும் சும்மா இருக்கவில்லை. பசி, பசி! வயிறு பசித்தாலும் வாய்க்கு ருசியைக் காணோம். வயிறு விரும்பும் உணவு செல்ல மறுக்கிறது. காப்பிக்கு வந்த கேடு, வேப்பெண்ணெயின் ருசி கொண்டுள்ளது. திண்டுக்கல் தவிர் வெற்றிலை இருக்கிறதே இது அம்ஜிக்கரை அகத்திக் கீரையின் ருசியைத் தருகிறது. பன்னீர்ப் புகையிலை — எனக்குப் பழக்கமான புகையிலை இதுவும் பினாயில் ருசியா ருசிக்கும். சே...சே, நாக்குச் செத்து, பல்லும் ஈறும் வேலை நிறுத்தம் செய்துவிட்டன.

வியாதிகள் வந்தால் வயிறுதான் கோளாறு செய்யும். இது உடலின் நியதி. சளிப்புக்கு வயிறு தவிர மற்றைய உணவுப் பாதைகள்







அனைத்தும் மட்டம் போடுகின்றன. பசியோ மிகக் கடுமை. உணவோ இறங்க மறுக்கிறது. குரலும் கரகர. மூக்கும் நொண நொண! கண்ணோ ஜிவுஜிவு. ஆதிநாள் மேடைக்கு வரும் ஹாஸ்ய நடிகனைப் போன்று நமது தோற்றம் பிறருக்குச் சிரிப்பாய் இருக்கிறது. நமக்குப் படா ரோதனை. நமது உடை சர்க்கஸ் கோமாளி உடையை நினைவூட்டுகிறது. நமது நடையோ தங்கவேலு, நாகேஷ், இருவரையும் வெல்லும் நடையாக அமைகிறது. நாம் ஏதோ ஹாஸ்ய நடிகனாகப் பிழைக்கப் போவதற்குப் பயிற்சிகள் பல செய்கிறோம் எனச் சுற்றத்தார் நம்புகிறார்கள். கேள்வி கேட்கிறார்கள்.

''ஷுமுதோஷம்'' என்று விளக்கிக் கூறிய பிறகுதான் நாம் ஹாஸ்ய நடிகனாகப் பயிற்சி செய்யவில்லை என்பதை அறிகிறார்கள். ஆனாலும் நம்மீது இரக்கச் சித்தம் காட்டுபவரைக் காணோம். நோய் வந்தால் பிறருடைய அன்பு கிடைக்கும். எந்த நோய்க்கும் மதிப்புத் தருவார்கள். ஜலதோஷம் நோய் இல்லையாம். இது வெறும் வேடிக்கையாம். இதற்கு மருந்தும் இல்லையாம். ஜலதோஷம் எத்தனை தமாஷ் தருகிறதோ, அத்தனை விதமான மருந்துகளைச் சொல்லுவார்கள். சொல்லும் போதே நம்பிச் சொல்லுகிறார்கள், எந்த மருந்தும் எவரையும் குணப்படுத்தாதென்று. ஜலதோஷம் சுவடு தராத அபாயமில்லாத நோயாம். அதாவது வந்த சுவடு தெரியாமல் திடுமென்று போய்விடுமாம். யாதும் சுவடு படாமல் வருகின்ற போகின்ற நோயாம் ஜலதோஷம்.

ஜலதோஷம் வந்தால்...?

பச்சை நிறத்துக் கம்பளியைப் போர்த்த வேண்டும். சாம்பிராணிப் புகை பிடிக்க வேண்டும். சூடாக டீ, காப்பி எது தேவையோ சாப்பிடலாம். இரண்டுக்கும் வேற்றுமை தெரியாது. எனவே எது கிடைக்கிறதோ, அதைக் குடிக்கலாம். தலைக்கு மணல் மூட்டையைத் தலையணையாகப் பயன் செய்யலாம். வெங்காயம் — பஜ்ஜி உருவத்தைத் தவிர மற்றைய பட்சணங்களில் வெங்காயம் நலம் தரும். இவ்வாறு நம்மைக் கண்ட எவரும் ஒவ்வொரு வைத்தியம் சொல்லுவார்கள். பிள்ளையார் பிடித்த கதைதான் உங்களுக்குத் தெரியுமே! ஜலதோஷம் பிடித்தவர்கள் களி மண்ணுக்குச் சமம். பிறர் பிடித்த பிடிக்கும், பிசையும் விதத்துக்கும் களிமண்ணாக இவர்கள் இடம் கொடுப்பர். ஜலதோஷம் வந்த நாம் மாயக் குயவனார் வரைந்த மண் பாண்டமாகி நிற்போம்.

ஜலதோஷம் வந்தால் கம்பன் கவிதை கூட ரசமற்றதாகச் செவிக்குப் படுகிறது. ரவி வர்மாவின் ஓவியங்கள், சுவரொட்டி விளம்பரமாகக் காட்சி தருகின்றன. கவிதை, சித்திரம், மட்டுமன்று - இவை கோவிலும் கோபுரமும் கூட மட்டம், தேவையற்றவை என்று படுகிறதே. தியாகய்யரின் கீர்த்தனைக்குக் காது இசைபட மறுக்கிறது. தேவார — திருவாசகங்கள் கசக்கின்றன. வானொலியில் நேயர் விருப்பம் எதுவுமே காதுக்கு இனிக்கவில்லை. எவை எவை தமிழர்கள் பெருமையோ, இட்டிலி, தோசை, மகாபலிபுரம் சிற்பங்கள், தஞ்சாவூர்க் கதம்பம், சேலம் மாம்பழம், மதுரை குங்குமம், சென்னைக் கடற்கரை யாவும்—யாவுமே மக்கிப் போயின.

''ஆக்கரிய மூக்கு'' என்று சூர்ப்பணகையின் மூக்கைப் பாராட்டிப் பேசினான் ராவணன். என் மூக்குக் குழாயில் நீர் கொட்டத் தொடங்கியதும் இலக்கியம், இசை, சித்திரம், விஞ்ஞானம் யாவும் கசந்து போய் விடுகின்றன. நான் காணும் இன்ப உலகங்கள் மறைந்துவிடு கின்றன. என் மூக்கு அடைபட்டதும் மீண்டும் இன்ப உலகங்கள் அனைத்தும் என் ஐம்புலன்களுக்கும் விருந்தாய், விநோதமாய், விவேகமாய், வேடிக்கையாய் இருக்கின்றன.

என்னை விட்டுச் சனி போகும்போது என் ஆத்மாவில் புதிய திருப்பம், புதிய ஒளி, புதிய நாதம், புதிய ஜீவன் உண்டாகின்றது. பார்த்தால் அற்ப மயமான மூக்கும் அதன் பாதைகளும் என் அறிவிலும், என் பண்பிலும் குறையை உண்டாக்கி வைத்தனவா? கோவிலையும், கோபுரத்தையும் அற்பமாய் நினைக்க வைத்தனவா? தியாகய்யர் கீர்த்தனையையும் மைசூர் சந்தனத்தையும் தியாகம் செய்ய நினைத்தனவா? என்று வியக்கிறேன்.

இரண்டு நாளைக்குப் பிறகு, என்னிடமுள்ள ஜலதோஷம் எங்கோ மறைந்தது. தும்மல் தூர விலகியது. நான் மீண்டும் மனிதன் ஆனேன். ரசிகன் ஆனேன். தமிழகத்துப் பொருள்கள் யாவும் இனித்தன. இன்பம் தந்தன. கலைகள் யாவும் களிப்பும் கல்வியறிவும் தரத் தொடங்கின. நான் தமிழனானேன்.



# உங்கள் செலவினங்கள் இப்பொழுதுதான் ஆரம்பமாகின்றன. சேமிக்கத் துவங்கவும் இதுவே சரியான தருணமல்லவா?



ஞாபகமிருக்கட்டும், நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ்தான் உங்கள் குடும்ப பாங்க்!

உங்கள் குழந்தையின் வளர்ச்சியை அனுசரித்து உங்கள் செலவுகளும் பெருகும்.

குழந்தை விரும்பும் விளையாட்டுச் சாமான்கள் அவனுக்கு உணவு வகை, பள்ளிக்கூடச் செலவுகள் துணிமணிகள், புத்தகங்கள்.

பந்துகள், இம்மாதிரி எத்தனையோ!

நிச்சயமாக அவன் ஏமாற்றம் அடைய விட மாட்டீர்கள்! அப்படித்தானே!

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸிற்கு வந்து ஒரு சேவிங்ஸ் பாங்க் கணக்கு ஆரம்பியுங்கள்.

சொற்பமாக, ஐந்தே ரூபாய்கள் இருந்தால் போதும். பிரதி மாதமும் அவனுக்காக ஏதோ இயன்ற அளவு தொகை போட்டு வாருங்கள். உங்கள் சேமிப்பு பாதுகாப்புடன் இருப்பது மட்டுமின்றி பிரதி வருடமும் 4% வட்டியும் பெறுகிறது.

தவிர உங்கள் பணம் எப்பொழுதும் உங்களுக்காகக் காத்திருக்கும். வேண்டியபோது திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

மறவாதீர்கள், நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ்தான் உங்கள் பாங்க். ஏனெனில் நாங்கள் குடும்பத்தினருக்காகவே சேவை புரிகிறோம்.



## நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது

அஸோஸியேடட் பாங்குகள்: லாயிட்ஸ் பாங்க் லிமிடெட், நேஷனல் புரொவின்ஷியல் பாங்க் லிமிடெட்

கிளைகள்: சென்னை: 3, நார்த் பீச் ரோடு; 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, (லாயிட்ஸ் கிளை); 6, அரமனைக்காரத் தெரு; 158, மவுண்ட் ரோடு; தூத்துக்குடி: 44, பீச் ரோடு; ஹைதராபாத்: அபித் ரோட்

1. புது டில்லியில் மே மாதம் 27ந் தேதி சாந்தி வனத்தில் அமரர் நேருஜியின் நினைவுக்கு உப ஜனாதிபதி அஞ்சலி செலுத்துகிறார்.

2. தேனாம்பேட்டை பாலசுப்பிரமணிய சுவாமி கோயில் திருப்பணியைச் சிறப்பாக நிறைவேற்றி வைத்த ஸ்ரீமதி மதுரம் கோபாலகிருஷ்ணா அவர்களுக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஆச்சாரிய சுவாமிகள் "அறப்பெருஞ்செல்வி" என்ற பட்டமும் பதக்கமும் அளித்து ஆசீர்வதித்தார்கள். ஸ்ரீ நிஷிதர் கோபுரச் சின்னம் பரிசை வழங்கிக் கௌரவிக்கிறார்.







3. தனியாக விமானத்தை ஓட்டி உலகைச் சுற்றிவந்த பிரிட்டிஷ் திரை நடிகை மிஸ் ஷீலா ஸ்காட்.



4. மே மாதம் 28-ந் தேதி கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தார் ரவீந்திர ஜயந்தியை வெகு விமரிசையாகக் கொண்டாடினர். ஸ்ரீகுமார் பானர்ஜி தொடக்க உரை நிகழ்த்துகிறார்.



# இளமேனியருக்கு இணங்கிய உறவு **பியர்ஸ்...**












## மென்மை கொஞ்சும் தூய கிளிசரின் சோப்

பச்சிள மேனிக்கும் இணங்கிய மென்மையுள்ளது பியர்ஸ். வரளவிடாமல் உங்கள் சருமத்தை இளங்கொழுந்து போல் புதுமையோடு போற்றுவது பியர்ஸ் சோப்பிலுள்ள கிளிசரின். தூய்மையானது பியர்ஸ்...மாணிக்கம் போல் படிகத் தன்மை படைத்தது. உங்கள் மேனியிது இளமை கொஞ்சிடவே : பியர்ஸ்

**தன் தூய்மையைக் கண்கூடாக உணர்த்துவது பியர்ஸ்**




*இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு*

லின்டாஸ்-PS. 15A-140

# சிலம்புச் செல்வர்

# ம.பொ.சி

வீ. ரங்கநாதன்



அந்நியத் துணி பகிஷ்கார இயக்கம் நடந்து கொண்டிருந்த நேரம் அது. சென்னை நகரில் ஜுனைஸ் சேட் என்பவரின் கடை எதிரே தினமும் மறியல் நடந்து வந்தது.

அந்தக் காலத்தில் டாக்டர் வரதராஜுலு நாயுடு அவர்கள் ''தமிழ் நாடு'' என்ற பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தார். அந்தப் பத்திரிகைக் காரியாலயத்தில் அச்சுக் கோக்கும் பிரிவில் வேலை பார்த்து வந்த அச்சுக் கோக்கும் தொழிலாளி ஒருவரது கண்கள் சதா கடிகாரத்தைப் பார்த்த வண்ணம் இருக்கும். அவரது கையும், காலும் பரபரக்கும்.

வேலை முடியும் நேரத்தை எதிர்நோக்கி அந்தத் தொழிலாளியின் உள்ளம் தாவி ஓடும். கை அங்கே அச்செழுத்துக்களை அடுக்கும். மனம் அந்நிய பகிஷ்காரப் போராட்டக் களத்தில் இருக்கும். மாலை மணி ஐந்து அடித்ததும் அந்நியத் துணி மறியல் போராட்டக் களத்துக்கு அவர் ஓடோடி வருவார்.

மறியல் தொண்டர்கள் ஐவர், ஐவராக அணிவகுத்து லோன்ஸ் ஸ்கொயரிலிருந்து புறப்படுவார்கள். ஜுனைஸ் சேட் கடை முன்பு மறியல் நடக்கும். மறியல் செய்யும் தொண்டர்களைப் போலீஸார் கண்மண் தெரியாமல் அடிப்பார்கள். அடிபட்ட தொண்டர்களைக் காங்கிரஸ் தொண்டர்கள் தூக்கிப் போவார்கள். அடிபட்டவர்களைத் தூக்கிச் செல்ல ''காங்கிரஸ் ஆம்புலன்ஸ்'' என்ற வண்டியும் இருந்தது.

அடிபட்ட தொண்டர்களுக்கு வைத்திய சிகிச்சை அளிக்க டாக்டர் ராமராவ் அவர்கள் ஆஸ்பத்திரி ஒன்றை நடத்தி வந்தார். அது பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளிக்கு அருகே இருந்தது.

ஒரு நாள் திரு காசா சுப்பா ராவ் அவர்கள் தலைமையில் மறியல் நடந்தது. வெள்ளை ஏகாதிபத்தியத்தின் யமகிங்கரப் போலீஸ் இதயமற்ற முறையில் காசா சுப்பா ராவ் அவர்களை அடித்து நொறுக்கியது. ரத்த வெள்ளத்தில் காசா சுப்பா ராவ் வீழ்ந்து விட்டார். அவரைக் காங்கிரஸ் ஆம்புலன்சுக்குக் காங்கிரஸ் தொண்டர்கள் தூக்கிச் சென்றார்கள்.

அப்படித் தூக்கிச் சென்ற தொண்டர்களில் இந்த அச்சுக் கோக்கும் தொழிலாளியும் ஒருவர். அந்தத் தொழிலாளி யார் தெரியுமா? அவர்தான் ஜூன் மாதம் 26ந் தேதி மணி விழாக் காணும் ம. பொ. சி. அப்போது அவருடைய மாதச் சம்பளம் பதினைந்து ரூபாய்கள்!

சிறு வயதிலிருந்தே சுதந்திரப் போராட்டத்தில் கலந்துகொண்ட ம. பொ. சிவஞானம் அவர்கள் 1906ம் ஆண்டு ஜூன் மாதம் 26ந் தேதியன்று சென்னை நகரில் உள்ள ஆயிரம் விளக்குப் பகுதியில் சாலைவான் குப்பம் என்ற இடத்தில் பிறந்தார்.

வறுமையிலே அவரது குடும்பம் இருந்த போதிலும் சுதந்திரப் போராட்டத்தில் முன்னணியில் நின்றார். வெள்ளை ஏகாதிபத்தியத்தை இந்த மண்ணிலிருந்து விரட்டி அடிக்கக் காந்தியடிகள் தண்டியில் உப்புச் சத்தியாக்கிரகம் செய்தார். ராஜாஜி அவர்கள் வேதாரண்யத்தில் உப்புச் சத்தியாக்கிரகம் செய்தார்.

அப்போது சென்னை நகரில் ஹைகோர்ட் கடற்கரையில் ஆந்திர கேசரி பிரகாசம் அவர்கள் உப்புக் காய்ச்சினார். வெள்ளைக்கார வெறியர்களின் குதிரைப் படைப் போலீசார் பிரகாசம் அவர்களைத் தாக்கிக் கைது செய்ய முற்பட்டனர். அந்தச் சமயத்தில் பிரகாசம் அவர்களைப் பாதுகாத்து நின்று ஏற்பாடுகளைச் செய்தவர் ம. பொ.சி. அவர்கள்.

1932ம் ஆண்டு. காந்தி – இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்ட நேரம். காந்தி அடிகள் மது அரக்கனை இந்த நாட்டிலிருந்து விரட்டி அடிக்க விரும்பினார். காந்தி இர்வின் ஒப்பந்தமே கள்ளுக்கடை மறியலை அனுமதித்தது. ஐவருக்கு மேற்படாமல் இருந்து மறியல் செய்ய ஒப்பந்தமே ஒப்புதல் அளித்திருந்தது.

அதன்படி தமிழகமெங்கும் கள்ளுக் கடைகளின் முன்பு காங்கிரஸ் தொண்டர்கள் ஐவர், ஐவராக மறியல் நடத்தினார்கள். சென்னை நகரிலும் மறியல் தீவிரமாக நடந்தது. திரு சத்தியமூர்த்தி அவர்கள் தலைமையில் மறியல் ஏற்பாடுகள் நடந்தன.

அந்தக் காலத்தில் சென்னை நகரில் ஏராளமான கள்ளுக் கடைகள் இருந்தன. மறியலும் தீவிரமாக நடந்தது. வட சென்னையில் மாணிக்கக் கிராமணி என்பவருடைய கள்ளுக்கடை அந்தக் காலத்தில் மிகப் பெரிதாக இருந்தது. அங்கு மறியலும் தீவிரமாக நடந்தது.

எப்படியாவது மறியலைத் தன் கடைக்கு முன் இல்லாமல் ஆக்குவதற்காக மாணிக்கக் கிராமணி போலீஸ் உதவியை நாடினார். போலீசும் வந்தது. மறியல் களத்துக்குத் தொண்டர்களும் வந்து விட்டார்கள். என்ன ஆகுமோ என்ற திகிலுடன் ஏராளமான மக்களும் அங்கு கூடிவிட்டார்கள்.

நிலைமை மோசமாகி வருகிறது என்று கேள்விப்பட்ட சத்தியமூர்த்தி அவர்கள் மறி

யல் கமிட்டிச் செயலாளருடன் மறியல் ஸ்தலத்துக்கு விரைந்தார். சத்தியமூர்த்தி வந்திருப்பதைப் பார்த்த மாணிக்கக்கிராமணி சத்தியமூர்த்தி நின்று கொண்டிருந்த இடத்துக்கு விரைந்து வந்தார். ''சாமி! மறியலுக்கு யாரை வேண்டுமானாலும் அனுப்புங்கள். ஆனால் இந்தக் குலத் துரோகியை மட்டும் அனுப்பாதீர்கள்'' என்று சத்தியமூர்த்தியின் பக்கத்தில் இருந்த வாலிபரைச் சுட்டிக்காட்டிக் கோபத்துடன் கூறினார்.

மாணிக்கக் கிராமணி குறிப்பிட்ட குலத் துரோகி வேறு யாருமல்ல. ம. பொ. சிவஞானம் அவர்கள்தான். காரணம்: கிராமணி வகுப்பில் பிறந்து, கள்ளுக் கடை மறியல் செய்கிறார் என்ற கோபம். தாம் பிறந்த சமுதாயத்துக்கு எதிராகவே கள்ளுக் கடை மறியல் செய்தார் திரு ம. பொ. சி. மறியல் கமிட்டி செயலாளராகவும் இருந்து பணியாற்றினார். தம் சொந்தத் தாய் மாமனின் கள்ளுக்கடை ஐஸ் ஹவுஸில் இருந்தது. அதன் முன்பும் ம. பொ. சி. மறியல் செய்தார்.

கிராமணி குலத்தில் பிறந்த ஒருவரே மறியலை முன்னின்று நடத்துவதைப் பார்த்துக் கிராமணி வகுப்பினர் கொதிப்படைந்தனர். ம. பொ. சி. அவர்களைக் குலத் துரோகியாகக் கருதினர். அவரது குடும்பத்தைச் சுற்றி ஒரு வெறுப்புணர்ச்சியை வளர்த்து விட்டார்கள்.

அந்தச் சமயம் ம. பொ. சி. அவர்களின் குடும்பம் வண்ணாரப் பேட்டையில் சோலையப்ப முதலித் தெருவில் இருந்தது. ஒரு நாள் மறியல் ஏற்பாடுகளைச் செய்து விட்டு இரவில் வீடு திரும்பினார்.

வீட்டு வாயிலை அடைந்த ம. பொ. சி. அவர்கள் மின்சாரத் தாக்குதல் பெற்றவராக நின்றார். அவருடைய வீட்டுச் சாமான்கள் நடுத் தெருவில் கிடந்தன. தாயும், தந்தையும், வயதுக்கு வந்த தங்கையும் நடுத் தெருவில் நின்றார்கள். ம.பொ.சி.யைப் பார்த்ததும் தாயும், தங்கையும் பிழியப் பிழிய அழுதனர்.

விஷயத்தை ஒரு நொடியில் ம. பொ.சி. புரிந்து கொண்டு விட்டார். தம்மீது கொதிப்புணர்ச்சி கொண்டிருந்த தம் சமூகத்தினர் தம் வீட்டைக் காலி செய்து நடு ரோட்டில் தள்ளி விட்டார்கள் என்பதைப் புரிந்து கொண்டு விட்டார். வீடு நடுத் தெருவாக ஆகிவிட்டது. திடீரென்று வீடும் கிடைக்காது.

சிறிது நேரம் யோசித்தார். ஒரு முடிவுக்கு வந்தவராய்த் தாய், தந்தை, சகோதரியைப் பார்த்து, ''ஊம்... புறப்படுங்கள்'' என்றார். அவர்களும், எங்கே, எந்த இடம் என்று கேட்காமல் புறப்பட்டனர்; ராமனைத் தொடர்ந்த சீதை, லட்சுமணன் போல.

வண்ணாரப்பேட்டையில் உள்ள தங்கவேல் பிள்ளை சேரியை நோக்கிப் புறப்பட்டது ம. பொ. சி.யின் குடும்பம். இங்கே ஒரு குடிசை சுலபத்தில் கிடைத்தது. ஒன்றரை ஆண்டு காலம் அந்தச் சேரியிலேயே குடி இருந்தார். சேரியில் குடியிருந்தாலும் கிராமணி சமுதாயத்தினர் ம. பொ. சி. குடும்பத்தினரைப் பகிஷ்காரம் செய்து ஜாதிக் கட்டுக் கட்டி வைத்து விட்டார்கள். சாவு, வாழ்வு எதற்கும் அழைப்பதில்லை. இது பற்றி எள்ளளவும் ம. பொ. சி. கவலைப்படவில்லை.

சேரியில் இருந்து கொண்டே ஹரிஜன சேவையில் ம. பொ. சி. ஈடுபட்டார். ஹரிஜன சீர்திருத்தக் கமிட்டி ஒன்றை அமைத்து அதன் மூலம் ஹரிஜன சீர்திருத்தம் நடத்தி வந்தார். வட சென்னையில் அப்படி அமைக்கப்பட்ட கமிட்டியில் பி. ராமமூர்த்தி அவர்களும் ம. பொ. சி. யுடன் இருந்தார்.

1934ம் ஆண்டில் முதல் முதலாக மகாத்மா காந்தி அடிகளை நேரில் தரிசிக்கும் பாக்கியம் ம. பொ. சி. அவர்களுக்குக் கிடைத்தது. வட சென்னையில் நடந்த பொதுக் கூட்டத்தில் காந்திஜியை வரவேற்று மாலை அணிவித்தார்.



அதற்குப் பிறகு 1946ம் ஆண்டில் காந்தி அடிகளைச் சென்னையில் இந்திப் பிரசார சபையில் சந்தித்தார். ம. பொ. சியைக் காந்தியடிகளிடம் ராஜாஜி அவர்கள்தான் அறிமுகம் செய்து வைத்தார். அச் சமயம்தான் சிறையிலிருந்து விடுதலை பெற்றிருந்ததால் உடல் மெலிந்து நோயாளிபோல் காட்சியளித்தார்.

''இவர்தான் சிவஞான கிராமணியார்'' என்று காந்திஜியிடம் அறிமுகம் செய்து வைத்த ராஜாஜி அவர்கள் ''இவர் கிராமணி வகுப்பில் பிறந்தும் மது ஒழிப்பில் தங்களை விடத் தீவிரமாக இருப்பவர்'' என்று காந்திஜியிடம் சொன்னார்.



அப்போது காந்தியடிகள் ம. பொ. சி.யைப் பார்த்துச் சிரித்தபடி ''நான் தித்திப்புக் கள்ளுக்கு (நீரா) விரோதி அல்ல. புளிப்புக் கள்ளுக்குத்தான் விரோதி. தித்திப்புக் கள்ளுக்கு நான் விரோதி அல்ல என்று சொன்னால் அதைப் புளிக்க வைத்து விடுவார்கள் என்ற பயம் எனக்கு இருக்கிறது. தித்திப்புக் கள் உடம்புக்கு நல்லது. நீங்கள் தினமும் தித்திப்புக் கள் சாப்பிடுங்கள். உங்கள் உடம்பு தேறி நன்றாகி விடும். யாராவது இதற்காக உங்களைக் குறை கூறினால் நான் சாப்பிடச் சொன்னதாகச் சொல்லுங்கள்'' என்று சொன்னார்.

இதற்குப் பிறகு 1947ல் காந்தி அடிகளைத் தில்லியில் தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது. அதன் பிறகு காந்தி அடிகளைத் தரிசிக்கும் பாக்கியம் அவருக்கும் கிடைக்கவில்லை; இந்த நாட்டுக்கும் கிடைக்கவில்லை.







சுதந்திரப் போராட்டத்தின்போது ம. பொ. சி. அவர்கள் ஆறு முறை வெங்கொடுமைச் சிறைக் கோட்டம் போயிருக்கிறார். சிறைக் கோட்டம் அவருக்குக் குடல் புண்ணைக் கொடுத்து விட்டது. இன்னும் அந்தக் குடல் புண் அவரை வாட்டி வதைக்கிறது.

1942ம் ஆண்டு வெள்ளையர் ஆட்சி நாட்டுத் தலைவர்கள் அனைவரையும் கைது செய்து சிறைக் கோட்டத்தில் அடைத்தது. யார் யார் கைது செய்யப்பட வேண்டும் என்ற பட்டியலை வைசிராயே தயாரித்தார். அதன்படி தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். அந்தப் பட்டியலின்படி அப்போதிருந்த சென்னை மாநிலத்தில் 41 பேர்கள் கைது செய்யப்பட்டனர். கைதான தமிழகத் தலைவர்கள் 11 பேர். இந்தப் பதினொரு பேர்களில் ம. பொ. சி.யும் ஒருவர்.

ஒன்றரை ஆண்டு காலம் பாதுகாப்புக் கைதியாகப் பல சிறைகளில் வைக்கப்பட்டார். தஞ்சை, வேலூர், அமராவதி போன்ற இடங்களில் இவரை வைத்திருந்தார்கள். 129 பவுண்டு எடையுடன் சிறைக் கோட்டம் சென்றார். வெள்ளை ஏகாதிபத்தியம் அவரது ரத்தத்தைக் குடித்து, சதையைத் தின்று எலும்பும் தோலும், நாரும் நரம்புமாக

88 பவுண்டாக்கி, சாகும் நிலையில் சிறை டாக்டர்களும் கைவிட்ட - கேசாக்கி, ஒரு ஸ்டெக்சரில் போட்டு வெளியே அனுப்பியது. மரணத்தின் தலைவாயிலை மிதித்துவிட்ட ம. பொ. சி. அவர்கள் எப்படியோ எமனை ஏமாற்றிவிட்டுப் பிழைத்துக் கொண்டார்.

தமிழக அரசியலில் ''மீசைக்காரர்'' என்று அழைக்கப்படும் ம. பொ. சி. அவர்களின் மீசையில் கூட ஒரு வரலாறு இருக்கிறது. ம. பொ. சி. அவர்களின் தந்தையாருக்குப் பெரிய மீசை உண்டு. அந்த மீசையைப் போல் நாமும் மீசை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஓர் ஆசை ம. பொ. சி. அவர்களுக்கு இள வயதிலேயே எழுந்தது.

முகத்திலே மீசை அரும்பிய காலம் தொட்டே அதை முறுக்கி விடத் தொடங்கினர். எப்போது பார்த்தாலும் அவரது கை மீசை மீது இருக்கும். மீசையும் கம்பீரமாக வளர்ந்தது.

ஒரு சமயம் சென்னை கார்ப்பரேஷனுக்குத் தேர்தல் வந்தது. முதலாவது வட்டத்தில் காங்கிரசுக்கும் ஜஸ்டிஸ் கட்சிக்கும் நேரடிப் போட்டி. காங்கிரஸ் கட்சிக்கு அந்த வட்டத்தில் வரிந்து கட்டிக் கொண்டு வேலை செய்தார் ம. பொ. சி. ஒரு கூட்டத்தில் அவர் பேசும்போது ''இந்த வட்டத்தில் ஜஸ்டிஸ் கட்சி நிச்சயம் மண்ணைக் கவ்வும்'' என்று மீசையை முறுக்கியபடி முழங்கினர்.

ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களுக்குக் கோபம் வந்து விட்டது. மீசையை முறுக்கிச் சவால் விட்டு விட்டாரே என்று புழுங்கினர்கள். தேர்தல் முடிவு விபரீதமாகி விட்டது. மூன்று வோட்டுக்கள் வித்தியாசத்தில் காங்கிரஸ் தோற்றுவிட்டது.

தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்டவுடன் ஒரு கூட்டம் கையில் கம்புகளை எடுத்துக் கொண்டு ''எங்கே அந்த மீசைக்காரர்?'' என்று கூவியபடியே அவரது வீட்டுக்கு வந்து விட்டது. நல்ல வேளையாக அந்தச் சமயம் ம. பொ. சி. அவர்கள் வீட்டில் இல்லை. மீசையில் கை போட்டதற்குக் கிடைத்த முதல் காணிக்கை.

மற்றொரு சமயம். தம் தாய் மாமனுடன் ம. பொ. சி. அவர்கள் தம் குடும்ப விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது ''அதெல்லாம் முடியாது'' என்று மீசையில் கை போட்டபடி பேசினர். அதைப் பார்த்த அவருடைய மாமாவுக்குக் கோபம் வந்து விட்டது. ''எனக்கு முன்னே மீசையை முறுக்குகிறாயே?'' என்று உறுமினர்.

அப்போதுதான் ம. பொ. சி.க்குத் தம் தவறு புரிந்தது. பெரியவர் முன்பு மீசை முறுக்கியபடி பேசிவிட்டோமே என்று வருத்தப்பட்டார். உடனே நேராகத் தாயிடம் சென்றார். ''அம்மா! இன்று முதல் மீசையை முறுக்க மாட்டேன்'' என்று சத்தியம் செய்து கொடுத்தார். அந்தச் சபதத்தை இன்றளவும் நிறைவேற்றி வருகிறார். முறுக்காத மீசை தொங்கிப் போய் இருக்கிறது. அது நரைத்தும் விட்டது. ஆனல் தலைமயிர் இன்னமும் நரைக்கவில்லை. இதற்கு அவரிடம் காரணம் கேட்டால், ''எனக்கு ஆசை நரைத்து விட்டது. அதனால் மீசையும் நரைத்து விட்டது'' என்று தமாஷாகக் கூறுகிறார்.

ம. பொ. சி. அவர்கள் வாலிபராக இருந்த போது அவரது காதில் சிவப்புக் கல் கடுக்கனும், கையில் ஒரு மோதிரமும் இருக்கும். ஒரு சமயம் ராயபுரத்தில் இருந்த அலுமினியத் தொழிற்சாலை ஒன்றில் வேலை நிறுத்தம் நடந்தது. அந்தத் தொழிற் சங்கத்தின் செயலாளராக ம. பொ. சி. இருந்தார். வேலை நிறுத்தத்துக்கு ஆதரவு திரட்டப் பொதுக் கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்தில் ம. பொ. சி. அவர்கள் பேசும் போது ''நிதியுள்ளோர் நிதி தாரீர்'' என்று வேண்டுகோள் விடுத்தார். கூட்டம் முடிந்து வந்து கொண்டிருந்தபோது கூட்டத்தில் இருந்து விட்டு வந்த ஒருவர் மற்றொருவருடன் பேசிக் கொண்டு வந்தது இவர் காதில் விழுந்தது. ''நிதி கேட்கும் இவர் கடுக்கனையும் மோதிரத்தையும் கொடுப்பதுதானே?'' என்று அந்த மனிதர் சொல்லிக் கொண்டு வந்தார். மள மளவென்று கடுக்கனையும், மோதிரத்தையும் ம. பொ. சி. கழற்றினர். ஒரு தொழிலாளியை அழைத்து ''இந்த நகைகளைச் சங்கத் தலைவரிடம் கொடுத்து விடு. நான் கொடுத்தது என்று யாருக்கும் தெரிய வேண்டாம்'' என்று சொல்லிக் கொடுத்து விட்டார்.

இளமையில் வறுமை கொடிது என்று சொல்வார்கள். ம. பொ. சி. அவர்கள் வறுமையின் கொடுமையை அனுபவித்தவர்.

1952ம் ஆண்டில் ஒரு நாள். காலஞ்சென்றுவிட்ட கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ம. பொ. சி.யின் வீட்டுக்குச் சென்றிருந்தார். கல்கி அவர்கள் ம. பொ. சி.யின் குடும்ப நண்பர். ம.பொ.சி. காரசாரமாகத் தலையங்கம் எழுதிக் கொண்டிருந்தார். கல்கி வந்ததைக் கவனிக்கவில்லை. கல்கி அவர்கள் நேராக உள்ளே போனர். அடுப்பில் உண்மையாகவே ஒரு பூனை தூங்கிக் கொண்டிருந்தது. ம. பொ. சி. அவர்களின் துணைவியார் ஒரு மூலையில் சோர்ந்து போய்ப் படுத்துக் கிடந்தார். அரிசி இல்லை. அதனால் பகல் கடந்தும் சமையல் நடக்க வில்லை என்பதைக் கல்கி அவர்கள் ஒரு நொடியில் புரிந்து கொண்டார்.

கல்கியின் கண்களில் கண்ணீர் வழிந்தது. வெளியே தமிழுக்காக — தமிழ் மக்களுக்காக வீர முழக்கமிடும் தலையங்கம் தயாராகிறது. உள்ளே ஒரு கவளச் சோற்றுக்கு வழியில்லை. அடுப்பில் பூனை தூங்குகிறது. அந்த நிலையைப் பார்த்த கல்கி அவர்களுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது.

நேராக ம. பொ. சி. அவர்களிடம் கல்கி சென்றார். ''உங்கள் குடும்பத்துக்காக ஒரு நிதி வசூல் செய்யப் போகிறேன். இருபத்தைந்தாயிரம் ரூபாய் வசூல் செய்து தருகிறேன். உங்களுடைய சம்மதம் கிடைத்தால் போதும்'' என்று உணர்ச்சி மேலிடச் சொன்னர். கல்கி அவர்கள் பல முறை வேண்டியும் ம. பொ. சி. மறுத்து விட்டார்.

இதற்குப் பிறகு 1956ல் ம. பொ. சி. அவர்களின் பொன் விழா நடந்த போது 33 ஆயிரம் ரூபாய் கொண்ட பண முடிப்பும், ஒரு காரும் அளிக்கப்பட்டன. திருச்சிக்காரர்


வீட்டுச் சலவையின்
பெருமை
ஸர்ப் சலவையின்
அருமை
Surf
AMAZING BLUE POWDER
FOR THE WHITEST WASH!

அநாயாசமாய்ச் சவாரி செய்ய உகந்தது பி.எஸ்.ஏ. **BSA**

பிரபலமிக்க பி. எஸ். ஏ. — இலேசானது, உறுதியானது, துரிதமாகச் செல்ல வல்லது—அது திரும்பவும் வந்துள்ளது. உற்சாகமான இளைஞர்கள் அநாயாசமாக சைக்கிள் ஓட்டும் மகிழ்ச்சியை மீண்டும் பெற, பி.எஸ்.ஏ. இப்போது இந்தியாவிலேயே தயாராகிறது. அமைப்பு அழகுக்கும் அயராத சேவைக்கும் உலகப் புகழ்பெற்றது பி.எஸ்.ஏ. உலகில் இப்பகுதியில் சிறந்த சைக்கிள்களைத் தயாரித்து வருபவர்களால் இப்போது பி. எஸ். ஏ. சைக்கிள் அதன் உயர்ந்த தரத்திற்கேற்பத் தயாரிக்கப்படுகிறது.

சிறந்த சைக்கிள் வேண்டுமா?
பி.எஸ்.ஏ.வைத் தேர்ந்தெடுங்கள்





பி.எஸ்.ஏ. உங்கள் மனைக்குரிய உயர்ந்த சைக்கிள்

**தயாரிப்போர்: டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ் 53.**
**உரிமையாளர்கள்: ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்.**



### புது மொழி!

இன்றைய உலகில் நல்ல தர்ம பத்தினிக்கு அடையாளம் என்ன தெரியுமா? தன் கணவனுக்கு வாய்க்கு ருசியான தின்பண்டங்கள் எவை? அவை எந்த ஹோட்டலில் கிடைக்கும் என்பதைத் தெரிந்து வைத்திருப்பதுதான்! - வா.கோ.பா.

---

ஒருவர் ஓர் ஏக்கர் நல்ல நிலத்தையும் பரிசாகக் கொடுத்தார். அந்த நிலம் ம. பொ. சி.யின் குடும்பத்துக்கு நெல் கொடுத்து வருகிறது.

ம. பொ. சி. அவர்கள் இதுவரை ஏறத்தாழ அறுபது புத்தகங்கள் எழுதியிருக்கிறார். அவர் முதன் முதலில் எழுதிய புத்தகம் ''கட்டபொம்மன்''.

1942ம் ஆண்டில் கட்டபொம்மன் வரலாற்றை ஆராய்ந்து எழுதினார். தாம் எழுதியதைத் தாமே தம் கையால் அச்சுக் கோத்தார். இப்போது மாநகராட்சி உறுப்பினராக இருக்கும் டி. என். கோவிந்தசாமி அவர்கள் அப்போது அச்சகம் ஒன்றை நடத்தி வந்தார். ம. பொ. சி. அவர்கள் கட்டபொம்மன் வரலாற்றை முழுதும் அச்சுக் கோத்துப் பாரம் ஆக்கி, கோவிந்தசாமி அவர்களிடம் கொடுத்தார். காகிதங்களாக அச்சடிக்கப்பட்டு விட்டன. புத்தகமாக ஆகவில்லை. அந்தச் சமயம் ம. பொ. சி. அவர்களைப் பாதுகாப்புக் கைதியாகப் பிடித்துச் சிறையில் அடைத்து விட்டார்கள்.

சிறையில் இருந்தபடியே கட்டபொம்மன் புத்தகத்தை வெளியிட முயன்றார். அப்போது அவருடன் கூடச் சிறையில் இருந்த முத்துரங்க முதலியாரிடம் அதற்கு முகவுரை பெற விரும்பி ஒரு புத்தகத்துக்கான அச்சடிக்கப்பட்ட பாரங்களைச் சிறைக்கு அனுப்பி வைக்குமாறு கோவிந்தசாமி அவர்களுக்கு ம. பொ. சி. கடிதம் எழுதினார். முத்துரங்க முதலியாரிடம் அதனைப் படிக்கக் கொடுத்து முகவுரை பெற எண்ணியிருந்தார்.

ம. பொ. சி. அவர்கள் எழுதிய கடிதம் போலீஸாரின் கழுகுக் கண்களில் பட்டு விட்டது. உடனே கோவிந்தசாமி அவர்களின் அச்சகத்தைச் சோதனையிட்டு முதல் முழுக்கமிட்ட கட்டபொம்மன் புத்தக அச்சுப் பிரதிகளைக் கைப்பற்ற விரைந்தனர். போலீஸ் சோதனை போட வருகிறது என்பதை முன்கூட்டியே அறிந்து கொண்டுவிட்ட கோவிந்தசாமி அவர்கள் கட்டபொம்மன் அச்சுப் பிரதிகள் அனைத்தையும் அப்புறப் படுத்தி விட்டார். சோதனை போட வந்த போலீசார் ஏமாந்து போனார்கள். சிறையில் இருந்து வெளி வந்தவுடன் கட்டபொம்மன் புத்தகத்தை ம. பொ. சி. வெளியிட்டார்.

1934ம் ஆண்டில் ''கிராமணி குலம்'' என்ற பத்திரிகையை ம. பொ. சி. நடத்தி வந்தார். அதன் பிறகு 1946 முதல் 1952 வரை ''தமிழ் முரசு'', ''தமிழன் குரல்'' என்ற பத்திரிகைகளை நடத்தி வந்தார். அதற்குப் பிறகு 'செங்கோல்' என்ற பத்திரிகையை நடத்தி வருகிறார். ''வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு'' என்ற வரலாற்று ஆராய்ச்சி நூலைச் சமீபத்தில் ம. பொ. சி. எழுதி வெளியிட்டார். ஔவையார் ஆராய்ச்சி நூலை இப்போது எழுதி வருகிறார்.

மணி விழா காணும் ம. பொ. சி. அவர்களின் தந்தையின் பெயர் பொன்னுசாமி கிராமணியார். தாயாரின் பெயர் சிவகாமி. தாயிடத்தில் அளவுகடந்த அன்பும், பக்தியும் கொண்டிருந்தார். ம. பொ. சி. அவர்களுக்கு ஒரு தம்பியும், தங்கையும் உண்டு. ம. பொ. சி. அவர்கள் முதலில் திலோத்தமை என்பவரை மணந்து கொண்டார். மணமான சில நாட்களிலே திலோத்தமை இறந்து விட்டதால் ராஜேசுவரி என்பவரை இரண்டாந்தாரமாக மணந்து கொண்டார்.

ம. பொ. சி.க்குத் திருநாவுக்கரசு என்று ஒரு மகனும், கண்மணி, மாதவி என்ற இரண்டு பெண்களும் இருக்கிறார்கள்.

ம. பொ. சி. அவர்கள் 1927ம் ஆண்டில் காங்கிரசில் சேர்ந்தார். 1954ம் ஆண்டு ஆகஸ்டு 8ம் தேதியன்று கருத்து வேறுபாடு காரணமாகக் காங்கிரஸில் இருந்து வெளியேறினார். அவர் காங்கிரஸில் இருந்த போதே 1946ம் ஆண்டு நவம்பர் 21ம் தேதி தமிழரசுக் கழகம் என்ற ஓர் அமைப்பைத் தொடங்கினார். கலை, கலாசாரக் கழகமாக இயங்கி வந்தது அது.

'மூர்த்தி சிறிது என்றாலும், கீர்த்தி பெரிது' என்பார்கள். அது போல் தமிழரசுக் கழகம் சிறிய அமைப்பாக இருந்தாலும் அதன் சாதனைகள் ஏராளம். சுதந்திரம் பெற்ற பாரதத்தில் தமிழகம் பல மாற்றங்கள் பெறக் காரணகர்த்தாவாக இருந்திருக்கிறார். தமிழகம் மொழிவழி மாநிலமாகப் பிரிக்கப்படக் குரல் கொடுத்தார். பிரிக்கப்பட்ட தமிழகம் இலக்கிய எல்லைகளோடு அமைய வடக்கெல்லை, தெற்கெல்லைப் போராட்டங்களை நடத்தி வெற்றி கண்டார். ''மதராஸ் மனதே'' என்று ஆந்திரர்கள் உரிமை கோரியபோது ராஜாஜி அவர்களுடன் ஒத்துழைத்துச் சென்னை நகரைக் காத்தார். ''தமிழ் நாடு'' என்று பெயர் வைக்கப் போராடினார். தமிழ் ஆட்சி மொழியாக ஆக்கப்பட அரும்பாடு பட்டார்.

ம. பொ. சி. அவர்களுடைய தமிழரசுக் கழகம் அண்மையில் அரசியல் கட்சியாக மாற்றப்பட்டிருக்கிறது. வரும் தேர்தலில் போட்டி போடப் போகிறது. வரும் தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்கு எதிராக ம.பொ.சி.யின் பேச்சும், செயலும் எப்படி இருக்கும் என்பதைக் காங்கிரஸ்காரர்களே உணர்வர்.

1948ம் ஆண்டு மே மாதத்தில் நாகர்கோயிலில் எழுத்தாளர் மகாநாடு ஒன்று நடந்தது. அதில் ம. பொ. சி.யும் பேசினார். அந்த மாநாட்டில்தான் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் ம.பொ.சி.க்குச் ''சிலம்புச் செல்வர்'' என்ற பட்டத்தை வழங்கினார்.

அவர் நீண்ட நெடுங்காலம் வாழ்ந்து நிறை செல்வம் பெற எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறோம்.

# யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

வேலூரிலிருந்து விடைபெற்றுச் சென்ற நாணுவின் தந்தை சுந்தரம் இத்தனை காலமும் வடக்கே காசி, ரிஷிகேசம் முதலிய இடங்களிலெல்லாம் இருந்து விட்டு இப்போதுதான் திரும்பி வந்தார். தாமாக அவர் வரவில்லை. பத்மநாபனின் கடிதமே அவரை வரவழைத்தது. ' ''நாணு சௌக்கியமாக இருக்கிறான். மேலத்தெரு பிச்சாமியின் பெண் லட்சுமி கோவையில் இருக்கிறாளல்லவா, அவளிடம் வளர்கிறான், செல்லப்பிள்ளையாக. இப்போது அவனைப் பார்த்தால் அடையாளமே தெரியாது. அப்படி வளர்ந்திருக்கிறான்' என்று கமலா எழுதியிருக்கிறாள். நீங்கள் ஒரு முறை வந்து போக முடியுமானால் நல்லது'' என்று அத்தான் எழுதியிருந்தார்.

கமலாவின் கடிதம் வந்ததும் அவனுடைய மனநிலையைப் புரிந்து கொண்டு அதிர்ச்சியுற்ற பத்மநாபன் கோவைக்கு வைத்தியரையும், இந்தக் கடிதத்தைச் சுந்தரத்துக்கும் அனுப்பி வைத்தார். அவருக்கும் சுந்தரத்துக்கும் இடையே வாரம் ஒரு முறை கடிதப் போக்குவரத்து இருந்து வந்தது இத்தனை காலமும். சுந்தரம் வேலூருக்கு வந்தபோது கண்ட சத்திய தரிசனம் இந்தப் பிணைப்பை உண்டாக்கியிருந்தது. முற்றும் புது மனிதராக அவர் மாறி விட்டார் சுந்தரம். ஆத்ம விசாரமே இப்போது அவரது யாத்திரையின் குறிக்கோளாகி விட்டது.

நாணு நுழைந்ததுமே கமலா ஓடி வந்தாள் பரவசத்துடன். அவனுடன் ஜெகுவும் இருக்கவே அவனுடைய உற்சாகம் சற்றுத் தணிந்து விட்டது. ''உன் அப்பா வந்திருந்தாரே, நாணு.. உன்னைப் பார்க்கத்தான் கோவைக்குப் போயிருக்கிறார்'' என்றாள்.

வியப்பும் வேதனையும் ஒருங்கே தாக்கின நாணுவை. முன்பு அவர் வந்த சமயம் அவன் வேலூரை விட்டு ஓடினான். இப்போது அவர் போய் விட்டார் அங்கிருந்து. இது என்ன சக்கரவட்டம்! ஒருவேளை அவரைப் பார்க்கவே முடியாது போய்விடுமோ!

''நாணு!'' அத்தான் குரல் விடுத்தார்.

குரலா அது? பாதாளக் கிணற்றிலிருந்து வருவது போல வந்தது.

''அத்தான்!'' என்று கூவினான் அவன் வேதனையோடு.

''வந்தாயாப்பா?'' என்றார் அவர். கையைத் தூக்கி அவனைத் தொட முயன்றார்.

ஆஜானுபாகுவாக, செக்கச் செவேலென்று எவரையும் ஒரே பார்வையில் எட்ட நிறுத்தும் அவருடைய கம்பீரம் எங்கே போயிற்று? படுக்கையில் கிடக்கும் இந்த உடலா அது! ரூபம் சுருக்க விடவே சிரமப்பட்டார். கண்களில் மட்டும் இன்னும் அந்தக் கூர்மை போகவில்லை. முகத்தில் அவை பெரிதாக விழிப்பதைப் பார்த்தபோது நாணுவின் நெஞ்சு பதறிற்று.

''என்ன நோய் என்று டாக்டர் சொல்கிறார்?'' என்று கேட்டான் கமலாவை.

கமலா கண்ணீரைத் துடைத்துக் கொண்டே, ''டாக்டருக்கே இன்னதென்று பிடிபடவில்லை, நாணு...எனக்கு உள்ளூறப் பயமாக இருக்கிறது'' என்றாள்.

20



''பயப்படக்கூடாது கமலா. அத்தானுக்கு அது பிடிக்காது. நீ தைரியமாக இருக்கவேண்டும், தெரிகிறதா?'' என்றான் நாணு.

அவளுக்குச் சொன்னானே தவிர, அவனுக்கு யார் தைரியம் கூறுவார்கள்?

ஜெரு கவலையோடு உட்கார்ந்து விட்டான். தனிமையில்கூட அவனிடமிருந்து பேச்சு கிளம்பவில்லை. பெருமூச்சு விட்டுக்கொண்டே கிடந்தான்.

ருக்கம்மா காப்பி கொண்டு வந்தாள்.

''நான் சாப்பிட மாட்டேன். அத்தான் இப்படிக் கிடக்கும்போது எனக்கு எதுவும் வேண்டாம்'' என்றான் நாணு.

ருக்கம்மா அழுதே விட்டாள். அவளும் இந்த நான்கு ஆண்டுகளில் மிகவும் மாறி யிருந்தாள். தலை முழுதும் நரை கூடியிருந் தது. படிப்பதற்கு மட்டுமே மூக்குக் கண்ணாடி அணிபவள் இப்போது எந்நேரமும் அணிந்து கொண்டிருந்தாள்.

''சௌக்கியமாக இருக்கிறாயாப்பா ?'' என்று விசாரித்தாள்.

நாணு சிரித்தான். ''இருக்கிறேன். எனக்கு ஒரு குறையும் இல்லை. அத்தானைத்தான் எல்லோரும் கவனிக்காமல் விட்டு விட் டீர்கள். அவர் இத்தனை காலமும் தம்மைத் தாமே உருக்கிக் கொண்டிருக்கிறார். ருக் கம்மா, நான் பாவி. அவரை இந்த நிலைக்குக் கொண்டு வந்ததற்கு எனக்கும் பங்கு உண்டு. நான் இங்கிருந்து ஓடினதால் அவர் மனம் ஒடிந்து போய் விட்டார்'' என்றான்.

அதில் அவனுக்குச் சந்தேகமே இல்லை.

ஜெரு கூட இதைக் கேட்டுக் கேவிக் கேவி அழுதான். நாணு டாக்டரிடம் ஓடி னான். ''அத்தானைக் காப்பாற்றுங்கள், டாக்டர். அவருக்குக் கடமைப்பட்ட உடல் இது. இதைக் கொண்டு அவரைக் காப் பாற்றுங்கள்'' என்று கதறினான்.





# வலிதான் எங்கள் பிரச்சினை...
## உங்களுக்கு நாங்கள் உதவக்கூடிய விதம் இதுதான்!

**ஆராய்ச்சி:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் ஒரு ஆராய்ச்சிக் குழுவின் தலைமை வகிப்பவன் நான். எங்களுடைய பணி வலியை தீர்க்க மேன்மேலும் சிறந்த முறையைக் கண்டுபிடிப்பதே. இந்தப் பிரச்சினையில் ஆழ்ந்த ஊக்கம் கொண்டுள்ள உலகத்தின் முதன்மையான பலகழகங்களுள் எங்களுடையதும் ஒன்று. வலிக்கு, இக்காலத்தில், சிறந்த ஒரே விடை 'ஆஸ்ப்ரோ' பார்முலா தான் என்பதை நாங்கள் இன்று அறிவோம்.

சமீபத்தில், அமெரிக்க அரசாங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற சோதனைகள் 'ஆஸ்ப்ரோ' விலுள்ள சுறுசுறுப்பாக இயங்கும் கூட்டுப் பொருள்தான் மிகவும் ஆர்தமான மற்றும் பயனுள்ள வலிநிவாரணி என்று தெளிவாக நிரூபித்துள்ளன. அதனால்தான் அது உலக முழுவதும் உள்ள டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

**வலி என்பது என்ன?** உயிர்ப்பொருள், உடல் வேகத்திற்கும் மேலாக, மிக விரைவாகத் திசுக்களில் சேர்ந்து குவிந்து, ஒரு ''மறைமுகமான'' வீக்கத்திற்குக் காரணமாகிவிட அது நரம்புகளை அழுத்துவதின் மூலம் வலி ஏற்படுகிறது.

**'ஆஸ்ப்ரோ' இயங்குவது எப்படி?** 'ஆஸ்ப்ரோ' உடனடியாக இரண்டறக் கலந்துவிடுகிறது—வீக்கத்தை நீக்கி—நரம்புகளின் மீதிருக்கும் அழுத்தத்தைப் போக்கி—வலியை வெளியே இழுத்துவிடுகிறது.

**இவைகளுக்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** வலி • தலை வலி • உடல் வலி • பல் வலி • மூட்டு வலி • ஜுரவேகத்துடன்கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு.

ASPRO

**அளவு:**
**பெரியவர்கள்:** இரண்டு மாத்திரைகள், தேவையானால் மீண்டும் இதே அளவில் உபயோகிக்கவும்.
**குழந்தைகள்:** ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டரின் சொல்படி.

A.G.36.66 TAM

# 'ஆஸ்ப்ரோ' வலியை வெளியே இழுத்துவிடுகிறது!

டாக்டர் கூடவா அழு வார்! அவரும் அழுது விட்டார்.

"ஏன் டாக்டர்? உலகத் துக்கே அன்பை வாரி வழங் கினீரே, என் அத்தான், அவருக்கு அன்பு காட்ட யாரும் இல்லையா? அவரைப் படுக்கையில் கிடத்தி அழகு பார்ப்பதுதானா தர்மம்? சொல்லுங்கள் டாக்டர்... அவரைக் காப்பாற்ற முடி யுமா, முடியாதா?" என்று நாணு பதறினான்.

"முடியும்" என்றார் டாக்டர் சாரநாதன். பிறகு சொன்னார்: "அவரை உடனே பட்டணம் கொண்டு போக வேண்டும். நாராயணா, அங்கே டாக்டர் சுரேஷுக்கு லெட்டர் தருகிறேன். அவரால் தான் ஏதாவது செய்ய முடியலாம்."

"கமலா, புறப்படுவதற்கு ஏற்பாடுகளைச் செய். நான் போய் முதலியாரைப் பார்த்து விட்டுக் கார் கொண்டு வருகிறேன்" என் றான் நாணு.

ஜெகு எழுந்தான். "நார்யாணா, நான் போய் அழைத்து வருகிறேன்... நீ கமலா வுக்கு ஆறுதல் சொல்லு" என்றவாறே பதிலை எதிர்பாராமல் புறப்பட்டு விட்டான்.

இதற்குள் கமலா மயங்கி விழுந்துவிட் டாள். நாணு ஓடிப் போய் அவளைத் தாங்கிக் கொண்டான். ருக்கம்மா தண்ணீர் எடுத்து வர ஓடினாள். முகத்தில் தெளித்து அவ ளுடைய மயக்கத்தை நீக்க முயன்றவாறே, "என்னாலேயே இதையெல்லாம் தாங்க முடி யல்லே. கமலா என்ன செய்வாள்? அப்பா மீது ஓர் ஈ உட்கார்ந்தாலும் பொறுக்க மாட்டாளே அவள்! இந்த நோய் குடி புகுந்து விட்டதே அத்தானிடம், ருக்கம்மா" என்று புலம்பினான்.

"நாணு!" — கமலா கண் விழித்தவாறே அழைத்தாள்.

"என்ன கமலா?"

"நீ போய்விட மாட்டாயே?"

"மாட்டேன் தாயே, மாட்டேன். ஒரு முறை போய்த்தான் என்னை நன்றாகக் காப்பாற்றிக் கொண்டு விட்டேன். மறுபடி யும் போய் நான் யாரையம்மா காப்பாற்றப் போகிறேன்? உன்னை விட்டு இனிமேல் நகரவே மாட்டேன், தாயே... மயக்கம் தீர்ந்ததா, கமலா?"

அவள் தலையை ஆட்டினாள்.

"எழுந்திரு. பட்டணம் போக வேண்டு மல்லவா? ருக்கம்மா, கமலாவுக்குக் காபி வந்து கொடு."

"வேண்டாம்" என்றாள் கமலா.

"நேற்றிலிருந்து அன்ன ஆகாரம் இல்லை யப்பா. இவளைப் பார்த்தால் சங்கடமாக இருக்கிறது, எனக்கு" என்றாள் ருக்கம்மா.

"என்ன கமலா இது?... நீ சாப்பிடவில்லை என்கிற சமாசாரத்தை அத்தானிடம்



யார் இந்தக் கோடீசுவரர்கள்?

விடை: பலரல்ல; அத்தனை செல்வத்தையும் கட்டி ஆள் பவர் ஒருவரேதான். அவர்தான் ராணி எலிஸபெத்.

சொல்லி விடுவேன், தெரி யுமா?"

"எனக்குச் சாப்பாடே செல்ல மாட்டேன் என் கிறது."

"நான் செல்ல வைக்கி றேன், வா, சாப்பிடலாம். உனக்காக நானும் சாப்பி டப் போகிறேன் இப்போது.. உம்... எழுந்திரு."

அவள் எழுந்து வந்தாள் அவனோடு. நாணு ஆதரவாக அவளைத் தாங்கிக் கொண்டு சமையலறைக்குச் சென்றான்.

ஜெகு கார் கொண்டு வந் தான். கூடவே முதலியாரை யும் அழைத்து வந்தான். நாணுவைப் பார்த்ததுமே அவர், "நீ வந்துவிட்டா யல்லவா, பையா?... இனி மேல் அவர் குணமடைந்து விடுவார். கமலா வும் ருக்கம்மாவும் துளிக்கூடப் பிரயோசன மில்லே. அவர்கள் ரொம்பப் பயப்படு கிறார்கள்" என்றார்.

நாணு அவரிடம் டாக்டர் சாரநாதனின் ஆலோசனையைக் கூறினான்.

"அதுதான் நல்லதென்று எனக்கும் தோன் றுது பையா. இட மாற்றமே வியாதியைத் தணிக்கும் என்பார்கள். தவிரவும் நாங்க ளெல்லாம் பழைய முறையிலேயே ஊறிய வர்கள். காலம் முன்னேறிக் கொண்டிருக்கிற வேகத்தில் செத்தவர் கூட எழுவர் என்று ஆகியிருக்கிறது" என்றார் முதலியார்.

தாமதம் செய்யாமல் நாணு அத்தானைப் பட்டணத்துக்கு அழைத்துச் சென்றான். கமலா, ருக்கம்மா, ஜெகு ஆகியோரும் உடன் வந்தனர். டாக்டர் சுரேஷின் பார் வைக்கு அபார சக்தி உண்டு என்று சொன் னார்கள். மேல் நாட்டில் நிறையப் படித்து விட்டு வந்தவர் அவர். நாற்பது வயதுதான் இருக்கும் அவருக்கு. கூட்சுமமான பார்வை பெற்றிருந்தார். எந்த நோய்க்கும் மூல காரணத்தை நொடிப் பொழுதில் கணித்து விடக் கூடிய பார்வை அது.

"டாக்டர், அத்தானைக் காப்பாற்றுங்கள்" என்று கண்ணீர் விட்டான் நாணு.

"ஆகட்டும். காப்பாற்றுகிறேன். அதற்கு முன்னால் ஒரு நிபந்தனை. நீங்களோ, கம லாவோ ஜெகுவோ கண்ணீர் விடக்கூடாது, இங்கே" என்றார் டாக்டர் சுரேஷ்.

"இது கண்ணீர் இல்லே, டாக்டர்... அத் தானுக்கு உடம்பு வலித்தால் எங்களுக்கும் வலிக்கிறது" என்றான் நாணு.

"உண்மைதான்... அதுபோல் நீங்கள் உற்சாகமாக இருந்தால் அவரும் உற்சாக மாக இருப்பாரல்லவா?" சுரேஷ் அவ ருடைய மனத் தத்துவத்தையே வேறு கோணத்தில் காட்டினார்.

நாணு சிரித்தான்.

சென்னையில் ஒரு வீடு அமர்த்திக் கொண்டு நாணு அத்தானைப் பராமரிக்கலானான். தின மும் காலையிலும் மாலையிலும் அவரைக் கடற்

கரைக்கு அழைத்துச் சென்று வருமாறு பணித்தார் டாக்டர் சுரேஷ். ஒரு பெரும் சூனியத்திலிருந்து விடுபட்டாற் போன்ற நிம்மதி பத்மநாபனுக்கும் வந்திருந்தது. முக்கியமாக நாணு உடன் இருந்ததால் அவர் கவலையற்றிருந்தார்.

"கமலா! கோயமுத்தூருக்குக் கடிதம் எழுதிச் சீதாவையும் இங்கே வரவழைத்தா லென்ன?" என்று கேட்டான் நாணு ஒரு நாள்.

கமலா சிரித்தாள்.

"அவள் வந்தால் அழகாகப் பாடுவாள். ஒரு தடவை அவள் பாடக் கேட்டு மெய்மறந்தே போனேன் நான். நிவாரணமும் நல்ல மருந்துதான். அத்தானுக்கு ஆறுத லாக இருக்குமில்லையா?" என்றான் நாணு தொடர்ந்து.

"அத்தானுக்கு மட்டும்தானா?" என்று திருப்பிக் கேட்டாள் கமலா குறும்பாக.

அவளுடைய கேலி நாணுவுக்குச் சிரிப்பைத் தான் தந்தது. பெண்களுக்கே இந்தத் திரு மண நினைவிலும் முடிச்சுப் போடுவதிலும் ஒரு தனி இன்பம். சீதாவின் பாட்டு அவனுக்குப் புளகிதம் தந்தது உண்மைதான். அந்தக் குரலைத்தான் அவன் கேட்டான். அவளை அவன் தன் இதயத்தில் ஏற்றிப் பார்க்க வில்லை. கமலா பார்ப்பது வேடிக்கையாகத் தான் இருந்தது.

"சீதா கடிதம் எழுதியிருக்கிறாள்" என்று கூறியவாறே ஒரு கடிதத்தைக் கொண்டு வந் தான் ஜெகு.

"என்ன எழுதியிருக்கிறாள்?"

"நாளைக்கு வருவதாக எழுதி யிருக்கிறாள். அங்கே இருப்பே கொள்ளவில்லையாம்."

"இருப்புக் கொள்ளுமா அவளுக்கு?" என்றாள் கமலா.

நாணு சிரித்து விட்டான். அவனுக்குப் பழைய நினைவுகள் வந்து விட்டன. கமலா அவனுடன் பழகிய முறையையும், பாருக் குட்டி பழகிய பான்மையையும் எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை அவனால். கமலாவிடம் அவன் கொண்ட அன்பு ஆரம்பத்தில் அவனுக்கே புரியாத அவஸ்தை யாகத்தான் இருந்தது. அதிலிருந்து விடு படவேண்டும் என்று பின்னர் தவித்துப் போனான். அதை இப்போது நினைத்துப் பார்த்தால் நாணமும், வெறுப்புமே அவன் மீது படர்கின்றன. அத்தானின் தூய மனத் தைச் சந்தேகித்த பாவம் அவனைக் கொல் கிறது. அடுத்து வந்த பாருக்குட்டி ஒரு நொடியில் அவனைக் கவிழ்க்க விருந்தாள். நல்ல வேளை! அவன் கவிழவில்லை. இந்த இரு சோதனைகளுக்குப் பிறகு எந்தப் பெண் ணிடமும் அவன் பழகவில்லை; பழக விரும்ப வும் இல்லை.

"கமலா, மாமாவுக்கு உடம்பு இப்போது கொஞ்சம் குணமாகி யிருக்கிறது இல்லையா?" என்று ஜெகு கேட்டான்.

"ஆமாம்" என்றாள் அவள்.

"நான் இனிமேல் இருந்து என்ன செய் யப் போகிறேன்? ஊருக்குப் போகலா மென்று நினைக்கிறேன்."

"அதுவும் சரிதான்."

"ஒரு வேளை என்னால்தான் அவர் பூரண குணமடையவில்லையோ என்னவோ! என் நிழல் எங்கேயும் படக் கூடாது கமலா... நான் ஓர் அயோக்கியன்." — வேதனையோடு ஜெகு சிரித்தான்.

கமலா ஒன்றும் சொல்லவில்லை. இங்கு வந்த பிறகு அவன் முன் போல் அதிகம் பேசாமல் கவலையே உருவாக இருந்தான். மருந்து வாங்கி வருகிற வேலை அவனுடைய தாகிவிட்டது. டாக்டரிடம் அவன்தான் போய் வருவான். அத்தானுக்கு மருந்து தரும் வேலை கமலாவுக்கு. இப்படி ஓர் அமைப் பில் ஜெகு தன் பங்கைச் சிரத்தையாகச் செய்து கொண்டு, இயந்திரத்தின் ஒரு பாகம் போல் இதுவரை இருந்து வந்தான். அவனைக் கண்டாலே, முகத்தைத் திருப்பிக் கொள்ளும் கமலாகூட அவனுடைய இந்த உதவியை ஓரளவு அங்கீகரித்தாள். ஆபத்துக் காலத்தில் உடனிருந்த காரணம் மட்டுமல்ல, பழைய பல்லவிகளை அவன் இப்போது பாடுவ தில்லை என்பதே அவள் வரையில் சகிப்புத் தன்மையைத் தந்திருந்தது.

"நார்மாவைப் பார்த்த பிறகு எனக்கே தெரியாமல் என்னிடம் சில மாறுதல்கள் உண்டாகி விட்டன கமலா... அவனுக்குச் சிகரெட் பிடிக்கக் கற்றுத் தந்த புண்ணிய வான் நான். என்ன செய்வது? என் வழி அவன்...!" ஜெகு பெருமூச்சு விட்டான்.

கமலா அவனையே பார்த்தாள்.

"உன்னிடம் சொல்வதற்கென்ன கமலா? நான் செய்யாத பாபம் எதுவுமே இல்லை. அம்மா என்னை அப்படி வளர்த்து விட்டாள். நீ கொடுத்து வைத்தவள். அத்தானைத் தந்தையாக அடைந்திருக்கிறாய். அதைவிட அதிர்ஷ்டம், நாணு உனக்குத் துணையாக இருப்பது. பங்களூரில் படிக்கிற காலத்தி லேயே எல்லா நல்ல பழக்கங்களையும் கற்றுக் கொண்டாயிற்று. எனக்கு யாரும் துணை வர மாட்டார்கள். ஏன் வரவேண்டும்? எத்தனை பெண்களுடன் பழகி யிருக்கிறேன். எல்லோருமே என்னைத் 'தூ' என்று உமிழ்ந்து விட்டார்கள். ரோஸி, வயலெட், ப்ரமீளா, அனு, காந்தா — பட்டியல் ரொம்பப் பெரிசு. அவர்களெல்லாம் பெண்களாக இல்லை; நானும் மனிதனாக இல்லை. பொய்யாக நடித்தேன். இப்போதுதான் கண் திறக்கிறாற் போல இருக்கிறது. ஆனால் இதையும் நம்பு வதற்கில்லை. வேதாளம் முருங்கை மரம் ஏறினாலும் ஏறும்."

ஜெகு கண்ணீரைத் துடைத்துக் கொண் டான். கமலாவுக்குச் சங்கடமாக இருந்தது. இதையெல்லாம் எதற்காக அவளிடம் சொல் கிறான்! கேட்டு அவளுக்கு என்ன ஆக வேண்டும்? அவை எல்லாம் தெரிந்த கதைகள்தாமே!

மறுநாள் ஜெகு புறப்பட்டு விட்டான்.

"மாமாவைக் கவனித்துக்கொள்ளுங்கள்.. நான் அடுத்த வாரம் வருகிறேன்... நாட்டிய நாடக மண்டலி அமைப்பு வேலையெல்லாம்




# புத்துணர்ச்சி மயம்

## Premium
## பிரீமியம் டால்க்

கருமையும் பொன்னிறமும் இணைந்த எடுப்பான டப்பாக்களிலுள்ள ஜே. கே. ஹெலன் கர்ட்டிஸ் பிரீமியம் டால்க் அத்தகையதே... கோடை நாட்களில் குளுமை நிறைந்த இதமான உணர்வை உங்களுக்கு அளிக்கும்... வசந்த காலப் புத்துணர்வோடு உங்களை நாள் முழுதும் வைத்திருக்கும்.

**பிரீமியம் டால்க் — உலகப் புகழ் பெற்ற ஹெலன் கர்ட்டிஸ் ஸ்தாபனத்தின் தரமான அழகுசாதன அணிவகுப்பைச் சார்ந்தது.**

J.K. Helene Curtis

PRESTN/HC/7A/66

ஏகபோக விநியோகஸ்தர்கள்: ஸ்பென்ஸர் & கோ. லிட்.







**உங்கள் குடும்பத்திற்கு அந்த வளமான வனப்பைத் தாருங்கள்—**

# மார்கோ சோப் மூலம்



நறுமணமிக்க மார்கோ சோப் உங்கள் குடும்பத்தவர் அனைவரின் உடலையும் மென்மையாகப் பாதுகாக்கிறது. மார்கோவில் வாசமேது மற்ற நீம் எண்ணெய் கலந்துள்ளது ... உங்கள் தோலின் இயற்கையான எண்ணெய்களைப் பாதுகாப்பதன் மூலம் தோலைக் காயாது காப்பாற்றுகிறது. மார்கோவின் அபரிமிதமான சுகாதார மிக்க நுரை தொற்று நோய்களை அணுகவிடுவதில்லை.

கல்கத்தா கெமிகலின் ஒரு தயாரிப்பு

JWT CCM 2968 A

லாம் உடனேயே ஆரம்பிக்க வேண்டும்'' என்றான் அவன்.

அவன் போனதுமே சீதா வந்தாள். ''நல்ல காலம். ஜெகுத் தடியன் போய் விட்டான்!'' என்று சிரித்தாள் கமலா. பிறகு அவளாகவே, ''ஜெகு இப்போது தடியனக இல்லை, சீதா... கொஞ்சம் மாறி யிருக்கிறான்!'' என்றாள்.

''மாறுவதுதான் வளர்ச்சி'' என்றான் நாணு.

''வளர்ச்சி மாறாமல் இருக்க வேண்டுமே?'' என்றாள் கமலா.

''மாறாமல் பார்த்துக் கொண்டால் போகிறது''

''நீ பார்த்துக் கொள்! உனக்குத்தான் இதிலெல்லாம் ஆசை!''

நாணு சிரித்தவாறே மருந்து வாங்கிவரப் புறப்பட்டான். ஆனால் டாக்டரே வந்து விட்டார். வாரம் ஒரு முறை அவரே வருவது வழக்கம். ''என்ன மிஸ்டர் நாராயண், இன்றைக்கு என் விசிட்டிங் டே அல்லவா? மறந்துவிட்டதா, என்ன? எங்கே அந்த புஷ்கோட்?'' என்றார் அவர்.

''ஊருக்குப் போயிருக்கிறான்'' என்றான் நாணு.

''டெம்பரேச்சர் என்ன? ஏ. பி. எல்லாம் சரியாக இருக்கிறதா?''

''ஏ. பி.யா?''

''ஓ! அந்தச் சுருக்கெழுத்து உங்களுக்குத் தெரியாதல்லவா? புஷ்கோட்டுக்குத் தெரியும்! ஆஸ்பத்திரிக்கு மருந்து வாங்க வரும்போது உங்களுக்கும் சொல்லித் தருகிறேன், ஏயும், பியும் என்ன வென்று.''

''ஜெகு இல்லாவிட்டால் கூடக் கஷ்டமாக இருக்கிறதே!'' என்றாள் கமலா சிரித்தபடியே.

உண்மையிலேயே அப்படித்தான் இருந்தது. அவன் அங்கே வளைய வளைய வந்துகொண்டே இருந்து விட்டுத் திடீரென்று மறைந்ததால் சற்றுச் சங்கடமாகத்தான் இருந்தது.

''அவன் ஒரு டைப்...ஆனா மனசிலே வஞ்சனை கிடையாது அவனிடம்'' என்றார் டாக்டர். ''என்னிடமே அவனுடைய காதல் கதைகளைச் சொல்ல ஆரம்பித்து விட்டான்.''

கமலா இதைக் கேட்டுச் சிரித்தாள். சீதாவுக்குப் பிடிக்கவில்லையோ என்னவோ, அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''ஸ்டட்கர்ட்லே நான் படிக்கிறபோது சாஸ்மன் என்ற ஒரு பையன் இப்படித்தான் இருந்தான். எப்போது பார்த்தாலும் போதையிலேயே கிடப்பான். பெண்களுடன் திரிவான். பல தடவைகளில் வழக்குகளில் சிக்கி வெளியே வருவான். கடைசியில் அவன் என்ன செய்தான், தெரியுமா?'' டாக்டர் கதை சொல்லலானார்.

''என்ன செய்தான் டாக்டர்?''

''ஜெர்மானியப் படைத் தலைவன் ஒருவனுக்காக உயிரையே கொடுத்தான் அவன். பார்ப்பதற்கு அவன் போலவே இருப்பான் சாஸ்மன். யுத்த காலத்தில் அவனை டூப்ளிகேட் படைத் தலைவனாகப் போட்டுக்கொண்டார்கள். சந்தோஷமாக உயிரைக் கொடுத்தான். நல்லவர்கள் கோழைகளாகத்தான் இருப்பார்கள். இந்த ஜெகுவைப் போன்றவர்களிடம் வீரம் உண்டு. அதாவது புஷ்—காரிய சாமர்த்தியம் — உண்டு. அதனால்தான் புஷ்கோட் போட்டுக் கொண்டிருக்கிறான் போலிருக்கிறது. கதை முடிந்தது. புஷ் கோட் காய்த்தது.''

அவர் போனதும் நாணு சிரித்தபடியே சொன்னான். ''நம்மைவிட அந்த புஷ்கோட் ரொம்ப உயர்ந்தவன் என்கிறாரே டாக்டர்.''

கமலா சிரித்தாள். ''ஏதாவது உளறியிருப்பான். வெகுளியாக இருக்கிறானே என்று அபிமானம் வந்து விட்டதுபோலிருக்கிறது.''

''போதுமே!'' என்று முகம் சுளித்தாள் சீதா. ''கொஞ்சமாவது வெட்கம் இருக்காதோ ஒருவனுக்கு!''

''தனக்குத் தானே வெட்கித்தான் மனம் திறந்து பேசுகிறான்!'' என்றான் நாணு.

''நீங்கள் எப்போதும் அவன் கட்சி'' என்றாள் அவள். (தொடரும்)




ஊரிலிருந்து வேறிடங்களுக்குச் செல்லும் ஒவ்வொருவருடைய மனத்தையும் வெகுவாகக் கவரக் கூடியது அங்குள்ள பழக்க வழக்கங்கள். உதாரணமாக இரு நண்பர்கள் சந்திக்கும்போது வணக்கம் தெரிவித்துக் கொள்வதில்தான் எவ்வளவு மாறுதல்கள்! வட இந்தியாவில் நகரத்தில் வாழும் மக்கள் ''நமஸ்தே ஜீ!'' என்றும் கிராமவாசிகள் ''ஜெயராம்'' என்றோ அல்லது ''ராம் ராம்'' என்றோ சொல்லிக் கொள்ளுகிறார்கள். சீக்கியர்கள் ''ஸஸ்ரீ கால்'' என்று சொல்கிறார்கள்.

ஜப்பானில் இரு நண்பர்கள் நடுத் தெருவில் சந்தித்துக் கொண்டாலும் முழங்கால் மூட்டின் மேல் கரங்களை ஊன்றிக் கொண்டு ஏதோ சாவி கொடுக்கப்பட்ட பொம்மைகள் போல் குனிந்து குனிந்து நிமிருகிறார்கள். அவர்கள் வீடுகளுக்குச் செல்ல நேர்ந்து விட்டால் வணக்கம் தெரிவிப்பது ஒரு கடுமையான தேகப்பயிற்சியாகி விடும்! துருக்கியில் கைகளை மார்பில் வைத்துக் கொண்டு தலையைக் குனிகிறார்கள். எகிப்தில், ''உங்களுக்கு எப்படி வேர்க்கிறது'' என்றும், சைனாவில் ''நீங்கள் சாப்பிட்டு விட்டீர்களா'' என்றும், ஜெர்மனியில், ''உன் நிலை எப்படியிருக்கிறது?'' என்றும், பிரான்ஸில் ''உன்னை எப்படி வைத்துக் கொண்டிருக்கிறாய்?'' என்றும் கேட்கிறார்கள். மொராக்கோ தேசத்தில் உள்ள மூர்ஸ் என்ற வகுப்பினர் வணக்கம் தெரிவிப்பது ஆச்சரியமாகவும், பயங்கரமாகவும் உள்ளது. நண்பரை நோக்கிப் படுவேகமாகக் குதிரையை ஓட்டிச் சென்று அவரை நெருங்கியதும் திடீரென்று குதிரையை நிறுத்தி நண்பரின் தலைக்கு மேலாகத் துப்பாக்கியால் சுடுகிறார்கள்! தென் ஆப்பிரிக்காவுக்குச் செல்கிறீர்களா? அப்படியானால் உங்கள் நண்பரின் மூக்குடன் உங்கள் மூக்கை உரசுங்கள்!

ஆதாரம்: பேஜண்ட்
தகவல்: ருக்மிணி ராமன்

KALKI — 26.6.1966

இலங்கைக் கடிதம்

# ஜவுளி விலை சரிந்தது!

ஈழனி

கொழும்பு ஜூன், 11—

ஜவுளி, ஜவுளி, ஜவுளி. இலங்கை முழுவதிலும், ஒரு கோடியிலிருந்து, இன்னொரு கோடி வரை, கிராமங்களிலிருந்து, பெரிய நகரங்கள் வரை, ஏன் இல்லங்கள் தோறும் இன்று இதைப் பற்றியே பேச்சு.

கடந்த வாரம் இலங்கை அரசாங்கம் சகல விதமான ஜவுளிகளுக்கும் விலைக் கட்டுப்பாடு திட்டத்தைத் திடீரென்று அமுலுக்குக் கொண்டு வந்தது. அதன்படி எந்த ரக ஜவுளியையும் ஒரு கஜம் ரூ. 3.50க்கு மேல் விற்கக் கூடாதென்று உத்தரவிடப் பட்டிருக்கிறது. காஞ்சிபுரம் பட்டுப் புடவை, கொறநாட்டுச் சேலை, கரைப் புடவை, பனாரீஸ், டாக்கா பட்டுப் புடவைகள், டெக்காரான், டெர்லின் மஸ்லின் முதலான விலைமதிப்புள்ள சகலவிதமான ஜவுளிகளையும் வியாபாரிகள் கஜம் ரூ. 3.50க்குத்தான் விற்றாக வேண்டும்.

இலங்கையில் ஏதோ இலவசமாகக் கிடைப்பது போல் ஜவுளிகள் விற்பனையாகும் செய்தியைக் கேட்டதும் 'ஆஹா, நாம் இப்போது இலங்கையில் இல்லாமல் போய்விட்டோமே' என்று சிலர் அங்கலாய்க்கலாம். ஆனால் நிலைமை உண்மையில் அவ்வளவு சுலபமானதாயில்லை. அநேகம் வியாபாரிகள் சட்டம் வருவதற்கு முதல் நாள் இரவே அதிக விலையுள்ள துணிகளை எப்படியோ அமுக்கிவிட்டார்கள். மிச்சமுள்ள ஜவுளியை வாங்க இரவு நள்ளிரவிலிருந்து பொழுது சாயும் வரையில் மைல் நீளக் கியூ வரிசை ஒவ்வொரு கடையிலும் காத்து நிற்கிறது. சாப்பாட்டைக் கட்டி எடுத்துக் கொண்டு, காயும் வெய்யிலையும் பொருட்படுத்தாது கியூ வரிசையில் போய் நின்றாலும் கூப்பன் இருந்தால்தான் ஜவுளி வாங்க முடியும். அரிசி வாங்குவதற்காக வழங்கியுள்ள கூப்பனில் 97வது இலக்கக் கூப்பனைக் கொண்டு ஒவ்வொருவரும் ஆறு கஜம் துணி வாங்கலாமென்று உத்தரவிட்டிருக்கிறார்கள். இந்தக் கூப்பன் உள்ளவர்கள் விருப்பமான எந்தத் துணியையும் வாங்கலாம். ஆகையால் ஒரு அரிசிக் கூப்பன் ரூ. 20 முதல் ரூ. 40 வரை விற்கப்படுகிறது. எளியவர்கள் தங்களுடைய கூப்பனையே விற்று விடுகிறார்கள். ரூ. 40 கொடுத்து ஒரு கூப்பன் வாங்கினாலும்கூட அதற்கு ரூ. 200 அல்லது ரூ. 300 மதிப்புள்ள ஜவுளி ரூ. 21.00க்குக் கிடைத்தால் லாபம்தானே!

ஜவுளிக் கடைகள் இருக்கும் கோட்டை, புறக் கோட்டைப் பகுதிகள் ஒரு பெரிய யுத்த முகாம் போலக் கடந்த ஒரு வாரமாகக் காட்சியளிக்கின்றன. எங்கு பார்த்தாலும் போலீஸ், இராணுவக் காவல் மிகப் பலமாக இருக்கிறது. கடைகளை மக்கள் கொள்ளையடிக்காமலும், கியூ வரிசையிலிருந்து விலகி முந்தியடித்துக் கொண்டு குழப்பம் உண்டு பண்ணாமலும் பாதுகாக்க ஆயுதம் தாங்கிய போலீஸ் படை இரவு பகலாக இப்பகுதிகளில் காவலிருக்கிறது.

இந்தத் திடீர் விலைக் கட்டுப்பாடு உத்தரவின் பயனாக அநேகம் வியாபாரிகள் கடந்த ஐந்தாறு ஆண்டுகளில் சம்பாதித்தது அனைத்தையும் இழந்து இன்சால்வென்ட் ஆகிவிடுவார்களென்றும், அநேகம் கடைகள் மூடப்பட்டுவிடுமென்றும் எதிர்பார்க்கப் படுகிறது. சட்டப்படி விற்க முடியாதென்று மறுத்துக் கடைகளைத் திறக்க மறுத்த சிலருடைய கடைகளை அரசாங்கம் சீல் வைத்துவிட்டது. அந்தக் கடைகளில் உள்ள ஜவுளிகளை அரசாங்கமே எடுத்து விற்பனை செய்ய முடிவு செய்திருக்கிறது.

## இந்த நிலை எப்படி வந்தது?

எந்த இறக்குமதியாளரும் கஜம் ஒரு ரூபாய்க்கு மேற்பட்ட ஜவுளியை இலங்கையில் இறக்குமதி செய்யக் கூடாது என்ற சட்டம் கடந்த நான்கு ஆண்டுகளாக அமலில் இருந்து வருகிறது. இலங்கையின் வெளி தேசச் செலாவணி நெருக்கடியை முன்னிட்டு இந்த உத்தரவு நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் ஸ்ரீமதி பண்டார நாயகா அரசாங்கத்தினால் கொண்டு வரப்பட்டது. ஆனால் வியாபாரிகள் அதிக விலைக்கு வெளி நாடுகளில் கொள்முதல் செய்து கஜம் ஒரு ரூபாய் என்று இன்வாய்ஸில் குறிப்பிட்டு விலை மதிப்புள்ள ஜவுளிகளை இங்கு இறக்குமதி செய்து வந்தார்கள். இன்வாய்ஸில் கண்ட தொகையை மட்டுமே சட்டப்படி இவர்கள் அனுப்ப முடியும். பாக்கித் தொகையைக் கறுப்புச் சந்தை வழியாகவே இவர்கள் அனுப்புகிறார்கள். கறுப்புச் சந்தையில் பண மாற்றுச் செலவிடும் கமிஷன் தொகை, சுங்க இலாகாவின் கண்களை மூடக் கொடுக்கும் கைலஞ்சம், எல்லாவற்றையும் துணியின் தலையில் சேர்த்து வைத்து விற்கும்போது கஜம் ரூ. 200, 300 என்று ஆகிவிடுகிறது.

திருடனுக்குத் தேள் கொட்டியதாக ஒரு கதையுண்டு. வியாபாரிகளின் நிலைமை இன்று அப்படி இருக்கிறது. அவர்கள் சட்டத்தை மீறி அதிக விலைக்கு ஜவுளிகளைக் கொள்முதல் செய்ததாகச் சொல்வதற்கில்லை. உண்மை இன்வாய்ஸின்படி கஜம் ஒரு ரூபாய்தானே! கொஞ்சம் இலாபமும் வைத்து ரூ. 3.50க்கு விற்பதென்னவென்று அரசாங்கம் கேட்கும் போது அரசாங்க உத்தரவை எதிர்த்துக் கோர்ட்டிலும் வழக்காடவும் வழியில்லை. கடந்த நான்கைந்து வருடங்களுக்கிடையில் பெருவாரியாகக் கொள்ளை இலாபம் அடித்துச் சேர்த்த பொருளை வெள்ளம் வேகமாக வாரக் கணக்கில் இழந்து தலையில் கையை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

# வீடுகளுக்கும் மற்றும் உணவு விடுதிகளுக்கும் ஓர் அரிய சாதனம்

# லீக்கோ நவீன வீட்டு எரி பொருள்

சிக்கனமானது • மற்ற எரிபொருள்களைவிட அதிக அனலை ஈந்து நீண்ட நேர வெப்பத்தை கொடுக்கிறது • புகையாதது • எந்தரக கரி அடுப்பினிலும் உபயோகப்படுத்தவல்லது.



சிறிய 'லீக்கோ' துண்டுகளை எடுத்துக் கொள்ளவும்.



பிறகு மெல்லிய அடுக்காக அடுப்பினில் பரப்பி வைக்கவும்.



வழக்கமான முறையில் எரிய வைக்கவும்.



சில நிமிடங்கள் கழித்து நன்றாக சுடர் விட்டவுடன் மேலும் வேண்டிய அளவு 'லீக்கோ' சேர்த்துக் கொள்ளவும்.

நெய்வேலி லிக்னைட்
கார்ப்பொரேஷன் லிமிடெட்,
நெய்வேலி-1.






# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இம் மாதிரி அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்:



★ கேசம் குறைதல்
மெழுக்கெகிற, துவண்ட ரோமம



இளமையில் வழுக்கை
இக் நிலை ஏற்படுவதைப் பெரும்பாலும்
தடுத்திருக்க முடியும்.

கேசம் குறைதல், ரோம உதிர்வு ஆகியவை உங்களைப் பாதித்தால் இன்றே ப்யூர் சில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்குங்கள். உங்கள் ரோமத்திற்கு ஆக்கம் தரும் பதினெட்டு அமினோ-அமிலங்கள் யாவும் அடர்வான நிலையிலே செறிந்துள்ளது ப்யூர் சில்விக்ரின். உச்சந் தலையிலே அழுத்தித் தேய்த்தால் ப்யூர் சில்விக்ரின் மயிர்க்கால்களை ஊடுருவி, நீடித்த நலனைக் கேசத்திற்கு மீட்டுக் கொடுக்கத் தேவைப்படும் இயற்கையான ஊட்டத்தை வழங்குகிறது.

ஆல் அபௌட் ஹேர் (ALL ABOUT HAIR) என்ற, படங்கள் கொண்ட இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினீர்களானால் இவ் விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1, சில்விக்ரின் அட்வைசரி சர்விஸ், தபால் பை 727, பம்பாய் 1.




**ப்யூர் சில்விக்ரின்**

கேசக் கோளாறுகளின் சிகிச்சைக்கான நேரான தீவிர குணம் செறிந்த தயாரிப்பு. ஒரு மாத சிகிச்சைக்குப் போதுமானது.

**சில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்**

நாள் முழுதும் உங்கள் கேசத்தைப் பாங்காகப் படியவைத்திருக்கும். கேசக்கோளாறுகள் ஏற்படாமல் தடுக்கப் போதுமான ப்யூர் சில்விக்ரின அடங்கியது



# Silvikrin

சில்விக்ரின் —கேச ஆரோக்கியத்திற்கான வழி



# மலேசியா மாநாடு

சா. கணேசன் எம்.எல்.ஏ

ஏப்ரல் 17ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை யானதால் மகாநாட்டு நிகழ்ச்சி ஏதுமில்லே. பெருமக்கள் யாவரும் ஊர்நலம் காண உலாப் போந்தனர். மாளிகைகள், சாலேகள், கடைகள், சந்தைகள் என்று அவரவர் வேட்கைக்கேற்ப வெளிப்பட்டனர். திருக்கோயில்கள், தொழிற்கூடங்கள், தொழிற் சங்கங்கள் போன்றவற்றுக்கும் சிலர் சென்றனர்.

தமிழர் யாவரும் போற்றி வழிபடும் திருக்கோயில்கள் பலவற்றுள்ளும் சீர்த்தியும் சீர்த்தியும் பெற்றவை இரண்டு. ஒன்று மாரியம்மன் கோயில்; இது காலத்தால் முற்பட்டது. நகரின் மத்தியில் இருப்பது. மற்றொன்று செந்தூல் என்ற நகர்ப்புறத்தில் உள்ள முருகன் கோயில். செந்தில் முருகன் திருக்கோயில் என்றும் அழைக்கப்பெறும்இது.

இரு பெருங்கோயில்களின் நிர்வாகிகளும் வழிபாடு செய்ய வரவேண்டுமென்று அன்போடு அழைத்தார்கள். தமிழகப் பெருமக்களில் பலரும் இக்கோயில்களுக்குச் சென்று வழிபாடியற்றினர்; காளாஞ்சி முதலிய மரியாதைகளேயும் பெற்றனர்.

மாரியம்மன் கோயிலுக்குச் சென்றதும் பழநிவேல்பிள்ளே முதலிய கோயில் அறங்காவலர்கள் எல்லாரையும் பரிவுடன் வரவேற்றுப் பெருஞ் சிரமத்துடன் அன்னே மாரியம்மன் திருமுற்றத்துக்குக் கொண்டு சேர்த்தனர். நாங்கள் ஆலய தரிசனம் செய்யச் செல்வதைக் கேள்விப்பட்ட அருமை மக்கள் ஆயிரக்கணக்கானவர் மாநாட்டுக்கு வந்துள்ள தமிழகத்துப் பெருமக்களேத் தரிசிக்க என்றே எங்கும் குழுமி விட்டனர். மாநாட்டில்தான் இவர்கள் வந்து கலந்து கொள்ள முடியாதே. எனவே, இப்படி முக தரிசனமாவது கிடைக்கட்டும் என்று வந்து குழுமினர் போலும்!

மூலட்டானத் திருத்தாயும், பிற தெய்வத் திருமேனிகளும் அழகழகாக அலங்கரித்துக் கொண்டு வாயிலே நோக்கியிருந்தமை, கடல் கடந்து வந்த தன் அருமைப் பெருமக்கட்கு அருள் சுரக்க என்றே காத்திருப்பது போலத் தோன்றிற்று. அறங்காவல் குழுவினர் அருமையாக ஏற்பாடு செய்திருந்தனர். அருச்சனே முதலான வழிபாடுகள் எல்லாம் சிறக்கச் செய்தபின் பிராகார மண்டபத்தில் வரவேற்புக் கூட்டம் நடைபெற்றது. முதலமைச்சர் உள்படப் பெருமக்கள் யாவருக்கும் மாலேசூட்டி வரவேற்புரை நிகழ்த்தினார்கள். எல்லார் சார்பாகவும் முதலமைச்சர் நன்றியுரை நவின்றார்.

இங்ஙனமே செந்தூல் முருகன் கோயிலுக்கும் தமிழகப் பெருமக்கள் சென்றனர். அங்கும் தமிழர்தம் தனிப் பெருந் தெய்வமான திருமுருகன் தன் அருமைச் செல்வர்களின் வரவு நோக்கிக் காத்திருப்பான் போல நின்றிருந்தான். அழுதொழுகுந் திருமுகத்தில் கருணே வழிந்தொழுகும் இரு கண் மலரின் அருள் நோக்கில் மனம் பறிகொடுத்துத் தம்மையே இழந்து நின்றனர் தமிழகப் பெருமக்கள். இந்த அழகுத் தெய்வத்தின் அருட்பொலிவைக் கண்டு மகிழ்ந்த பின் யாவரும் அறுசுவைப் பிரசாதங்களே உண்டு மகிழவும் செய்தோம். இங்கு மட்டும் என்ன, கூட்டமும் வரவேற்பும் இல்லாமலா போய் விடும்?

மாரியம்மன் கோயிலேப் போலவே இங்கும் ஆயிரக்கணக்கான மக்கள் திரண்டு விட்டனர். வழிபாட்டின் பின்னர் வரவேற்புக் கூட்டம் நடைபெற்ற செட்டியார் ஹால் நிரம்பி வழிய, முன் தோட்டமும் மக்களால் நிறைந்து விட்டது. நகரத்தார் சார்பாக மாலே மரியாதைகள் செய்யப்பட்டன. வரவேற்புரையும் நிகழ்த்தப் பெற்றது. முதலமைச்சர் எல்லார் சார்பிலும் நன்றியுரை பகர்ந்தார். ஆலயங்களில் காணப்பெறும் தூய்மையையும், துப்புரவையும் பெரிதும் பாராட்டினார். மக்களின் பக்திப் பெருக்கையும், ஒழுங்குமுறையையும் கண்டு தம் மனம் மிகவும் இன்புறுகிறது என்றார். 'இந்த அருமையால்தான் இந் நாட்டுத் தமிழ் மக்கள் இன்பம் பெருக வாழ்கிறார்கள்' என்று கூறி, 'உங்கள் வாழ்வு வளம் பெறுக' என்று வாழ்த்தும் கூறினார்.

அன்றிரவு தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம் தமிழகத்திலிருந்தும் ஈழத்திலிருந்தும் வந்திருந்த மாநாட்டுப் பெருமக்களுக்கு வரவேற்பு அளித்தது. சிலரைப் பேச வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டது. திருவாளர்களான ம. பொ. சிவஞானம், இரா. நெடுஞ்செழியன், மு. வரதராசன், டி. கே. சண்முகம், கா. பொ. இரத்தினம் முதலியவர்களுடன் நானும் அழைக்கப்பட்டிருந்தேன். சென்றோம். ஓர் அருமையான தியேட்டர். இரண்டாயிரம் பேர்கள் உள்ளே அமர்ந்திருந்தனர். வெளியில் இன்னும் பலர் குவிந்திருந்தனர்.

இந்த அருமையான மண்டபம் தொழிலாளர் சங்கத்தின் உடைமை என்பதைக் கேட்டதும் பலர் அசந்தே போய் விட்டனர் என்றால் அது மிகையல்ல. இவர்

கட்டு அலுவலகக் கட்டடம் வேறு இருக்கிறது. அதுவன்றி ஒரு சிறந்த மாணவர் விடுதியையும் கட்டி அருமையாக நடத்தி வருகிறார்கள். அவ்விடுதிக்குத் தங்கள் அருமைத் தலைவர் பெயரைச் சூட்டி, ''பி.பி. நாராயணன் மாணவர் விடுதி'' என்று அழைத்து வருகிறார்கள். இக்கட்டடங்கட்கெல்லாம் பல லட்சம் டாலர்கள் செலவு செய்திருக்கிறார்கள் என்பதை எல்லாம் கேட்கும் போது உள்ளம் இன்பம் நிறைந்து குளிர்கிறது.

இந்தக் கூட்டத்தில் பலரும் பேசினார்கள். தமிழின் பெருமை, தமிழ்ப் பண்பாட்டின் அருமை, மலேசியா நாட்டின் செழுமை, அதை ஆள்பவர்களின் நேர்மை; பல மொழி, பல மதம், பல நாகரிகம் எல்லாம் கலந்து உறவாடி ஒன்றை ஒன்று தாக்காமல், தாங்கி நின்று, பயன் கொழிக்கும் நீர்மை ஆகிய சிறப்புக்களைப் பற்றி வெல்லாம் மனம் களிக்க எல்லாரும் உரையாற்றினர். அவையோர்கள் — ஆம், எல்லாரும் தொழிலாளர்கள்தாம்—அரிய கருத்துக்களோ அன்றி நகை மலர்களோ உதிரும்போதெல்லாம் மகிழ்ச்சி ஆரவாரம் புரிந்து தங்களின் பண்பட்ட ரசிகத்தன்மையைப் புலப்படுத்திக் கொண்டேயிருந்தனர். மலேசியாவிலேயே எல்லா வகையிலும் பெரிய தொழிற் சங்கம் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கமே. பிற பல்வேறு சங்கங்களிலெல்லாம் ஆயிரக் கணக்கிலும், பதினாயிரக்கணக்கிலும் உறுப்பினர் தொகை இருந்து வருகிறது. அவற்றுள் அதிக எண்ணிக்கை உறுப்பினர்களைக் கொண்டது அரசாங்க ஊழியர் சங்கமே. அதன் உறுப்பினர் தொகையே சுமார் நாற்பதாயிரந்தான். ஆனால் தே. தோ. தொ. சங்கமோ ஒன்றரை லட்சத்துக்கும் மேற்பட்ட உறுப்பினர்களைக் கொண்டு திகழ்கிறது. நல்ல உறுப்பினர்கள்; நல்ல தலைவர்கள்; சிறந்த நிர்வாகம்; செவ்விய விதிமுறைகள் அப்புறம் அதன் வளர்ச்சிக்கும் செழிப்புக்கும் கேட்கவா வேண்டும்?

தொழில்வாரியாக அமைந்த சங்கங்கள் பல உள்ளன மலேசியாவில். எல்லாச் சங்கங்களும் அமைந்த ஒன்றிப்பு ''மலேசியா தொழிற்சங்கக் காங்கிரஸ்'' (Malaysian trade union congress) என்ற பெயருடன் இயங்கி எல்லாத் தொழிலாளர்களின் நலன்களையும் கட்டிக் காத்துக் கொண்டிருக்கிறது. இது ''அனைத்து நாட்டுச் சுதந்திரத் தொழிற்சங்க ஒன்றிப்புக் கூட்டவை'' (The International confederation of free trade unions) வுடன் இணைக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஒன்றிப்பை மலாய் மொழியில், ''காங்கிரஸ் கொசத்துவான் செகர்ஜா மலேசியா'' என்று அழைக்கிறார்கள். ரோமன் லிபியையே மலாய் மொழி தனது லிபியாகவும் கொண்டு விட்டதால் இப்பெயரை (Kongres kesatuan sekerja malaysia) என ஒலிக்கேற்ப எழுதுகிறார்கள். உலக வழக்கில் நிலைத்துவிட்ட சொற்களுக்குத் தம் மொழியில் புதிதாக ஒரு சொல்லை உற்பத்தி செய்யும் அவநிலை மலாய் அறிஞர்கள் மேற்கொள்ள வில்லை. ஆனால் பிற மொழியில் உள்ள அச்சொல்லைத் தம் மொழி மரபுக்கு ஏற்பத் தழுவிக் கொள்ள அவர்கள் ஒரு சிறிதும் தயங்க வில்லை.

இந்த ஒருமைப்பாட்டை, இதனால் விளையும் நற்பயனைக் கணித்தறியும் ஆற்றலுடைய பேராசிரியர் மு. வரதராசன், ''இன்னும் சில ஆண்டுகளில் இம்மொழியின் வளர்ச்சி எட்டிப் பிடிக்க முடியாதவண்ணம் உயர்ந்தோங்க, ஆசிய கண்டத்திலேயே சிறந்த, வளம் மிக்க ஒரு மொழியாக இது விளங்கக் கூடும்'' என்று கூறினார். பலருடைய கருத்தும் அப்படியேதான். நாமும் வாழ்த்துவோம் மனம் களிக்க. ''எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்று அறியேன்'' என்பது தானே தமிழனின் சால்பு?

இனி மாநாட்டின் நிகழ்ச்சிகளைக் காண்பதற்கே நேரம் போதாதாகையால் இப்பொழுதே, மலேசியாவின் தொழிற் சங்க வரலாற்றைப் பற்றியும், தற்பொழுதைய நிலையைப் பற்றியும், ஒரு சிறிதளவு தெரிந்து கொள்ளலாம்.

1936 — 1940ம் ஆண்டுகளில் செந்தூல் ரயில் தொழில்கூடத்திலும், பத்து ஆராங் நிலக்கரிச் சுரங்கத்திலும், சிலாங்கூர் தோட்டங்களிலும் தொடர்பாக நடந்த வேலை மறுப்புக் (Strikes) கள் அரசாங்கத்தைத் தொழிற்சங்கச் சட்டம் இயற்றச் செய்தன. இந்தச் சட்டம் இருவகையில் பணி புரிந்தது. (1) தொழிற்சங்கங்கள் யாவும் பதிவு செய்யப்பட வேண்டும். (2) தொழிற் சங்க இயக்கம் வரம்புக்குட்பட்டவையாக இருக்க வேண்டும். இச்சட்டத்தில் வேலை மறுப்புச் செய்வதற்கும் வழி வகுக்கப்பட்டது. இச்சட்டம் 1941 டிஸம்பர் 8ம் தேதி ஏற்பட்ட உலகப் போர் தொடக்க நாள் வரை அமுல்படுத்தப்பட வில்லை. ஒரு தொழிற்சங்கம்கூடப் பதிவு செய்து கொள்ளவும் இல்லை.

ஜப்பானிய ஆக்கிரமிப்புக் காலத்தில் மலேயன் கம்யூனிஸ்ட் கட்சி தொழிலாளர் இயக்கத்தை ரகசியமாகவே நடத்தி வந்தது. ஆக்கிரமிப்பு நீங்கியபின்னர் அதாவது 1945 ஆகஸ்டில் பகிரங்கமாகச் செயல்படத்தொடங்கின. 1945 ஆகஸ்டு முதல் 1948 ஜூன் வரை தொழிற்சங்க இயக்கம் பெரும்பாடு பட வேண்டியதாயிற்று. வேலை மறுப்பு என்பது அன்றாட நிகழ்ச்சியாகி விட்டது. அரசாங்கம் தொழிற்சங்க இயக்கத்தைக் கட்டுத் தட்டும் வேலையில் முனைந்து நின்றது. எல்லாத் தொழிற் சங்கங்களும் 1940ஆம் ஆண்டுச் சட்டப்படி பதிவு செய்யப்பட வேண்டுமென்பதை அமுலாக்கக் கொண்டு வரலாயினர்.

பிரிட்டிஷ் தொழிற் சங்க அதிகாரியான திரு ஜே. ஏ. பிரெளியர் என்பவர் 1946ல் மலேயாவின் தொழிற்சங்க ஆலோசகராக நியமிக்கப்பட்டார். பின்னர் இவருடன் சேர்ந்து பணியாற்ற மற்றுமிரு பிரிட்டிஷ் அதிகாரிகளும், மலேயாவில் தேர்ந்தெடுக்கப் பட்ட சில அதிகாரிகளும் நியமிக்கப்பட்ட



பி. பி. நாராயணன் மாணவர் விடுதி. தேசிய தோட்டத் தொழிலாளர் சங்கத்தினால் கட்டப் பட்டு நடத்தப்பட்டு வருகிறது.

னர். இந்தக் காலத்திலேதான் உறுதியான தும் நல்ல முறை என்று கண்டு கொண்டது மான விதிகளுடன் கூடிய சங்கங்களை அமைக் கும் சிரமமான பணி தொடங்கிற்று.

ஆக்கிரமிப்பு அகன்ற சிறிது காலத்தில் கட்சிச் சார்பற்ற பல சங்கங்கள் தோன்ற லாயின. இவைகள் தங்கள் இயக்கத்தை, உறுதியான அடிப்படையுடையதாகச் செய்வ தில் வெற்றியடைந்தன. இருந்தாலும் மொத்தமாகப் பார்த்தால் தொழிற்சங்க இயக்கம் குழப்ப நிலையில்தான் இருந்தது.

1948ல் அவசர நிலைமை பிரகடனம் செய்யப்பட்டதும் ஒழுங்கீனமான தொழிற் சங்கங்களின் நிர்வாகிகள் இரவோடு இர வாகத் தலை மறைவாகி விட்டனராம். உடனே அரசாங்கம் தலையிட்டு அச்சங்கங்களின் நிதி வளங்கள் முழுவதையும் அப்படியப் படியே முடக்கி விட்டதாம். இதனால் நேரிய முறையில் நடந்து வந்த தொழிற்சங் கங்களும், இயக்கமும் கூடப் பெரிதும் பாதிக்கலாயிற்றும். அஞ்ச வேண்டாத தொழிற்சங்கங்கள் அரசாங்கத்தின் கடுமை யான கட்டுப்பாடுகட்கிடையே முறைப்படி இயங்கிக் கொண்டுதானிருந்தன.

இத்தகைய ஒரு சூழ்நிலையிலேதான் எல் லாத் துறைச் சங்கங்கட்கும் பொதுவாக, ஒரே ஒரு குரல் கொடுக்கக் கூடியதான, தேசியத் தொழிற் சங்க மத்திய அமைப்பு ஒன்று இன்றியமையாதது என்பதை இயங் கிக் கொண்டிருந்த சங்கங்கள் உணரத் தொடங்கின. அதன் பயனாகவே, 'மலேசியா தொழிற்சங்கங்களின் பேரவை' (Malayan trade unions council) தோற்றுவிக்கப்பட்ட தாம். 1958 டிஸம்பரில் அதன் பெயர் 'மலேயா தொழிற் சங்கக் காங்கிரஸ்' என்று மாற்றப்பட்டது. மலேயா நாடு 'மலேசியா' என்று வளர்ந்தபின், பெயரும் 'மலேசியா தொழிற்சங்கக் காங்கிரஸ்' என்று வளர்ந்து எல்லா வகையிலும் சிறந்து விளங்குகிறது.

மலேசியாவில் பதிவு செய்யப்பட்ட சங்கங்களின் தொகை சுமார் 300 ஆகும். அவற்றின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை நாலு லட்சத்துக்குக் குறையாது. ம.தொ.ச. கா.வில் இணைக்கப்பட்ட சங்கங்கள் 91 தான். என்றாலும் இவற்றின் உறுப்பினர் எண்ணிக்கை மூன்று லட்சத்துக்கும் அதிகமாக உள்ளது.

இக்காங்கிரஸின் சிறப்பியல்பு என்ன என்று காண்போம். இதன் தலைவர்கள் பாட்டாளி மக்களிலிருந்தே தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள். தொழிலாளர்கள் வெளியார் உதவியை நாடுவதே இல்லை. மலேசியா தொழிற்சங்க இயக்கம் இன, மத, மொழி அடிப்படையில் அமையாத, மலேசியாத் தொழிலாளர்களின் பொது இயக்கமாகும். இவ்வியக்கம் முழுக்க முழுக்கச் சுதந்திர மானது; கட்சிச் சார்பற்றது; ஜனநாயக மானது; பொறுப்புள்ளது. வெளியார் தலையீடின்றி இயக்கம் இப்படியே வளர வேண்டுமென்பதுவே இயக்கத் தலைவர்களின் கருத்து. தொழிற்சங்கங்கள் அரசியல் கட்சி களுடன் இணைந்து கொள்ளவும் கட்டணம் கொடுக்கவும் சட்டம் அனுமதிக்கின்றது. ஆனாலும் எந்த ஒரு சங்கமும் இந்த நெறியில் செல்ல வில்லை; செல்லவும் விரும்பவில்லை.

இவர்களின் ஒரு பெருந்தலைவரான திரு பி. பி. நாராயணன் அனைத்து நாட்டுச் சுதந்திரத் தொழிற் சங்கங்களின் ஒன்றிப்புக் கூட்டவையின் ஆசியப் பகுதி அமைப்பின் தலைவராக 1960–62ல் தேர்ந்தெடுக்கப்பட் டுப் பணி புரிந்திருக்கிறார்.

91 தொழிற்சங்கங்களை இணைத்துக்கொண் டிருக்கும் மலேசியத் தொழிற்சங்கக் காங் கிரஸின் துறை வழி உறுப்பினர் தொகை யைப் பார்ப்போம்.

| | | |
|---|---|---|
| 1. | தோட்டத் தொழிலாளர் | 1,50,382 |
| 2. | சுரங்கத் தொழிலாளர் | 14,857 |
| 3. | ரயில் முதலிய போக்குவரத்து | 20,120 |
| 4. | நகராட்சி, ஊராட்சி | 10,248 |
| 5. | துறைமுகம், படகுத்துறை | 7,642 |
| 6. | தொழிற்சாலைகள், உற்பத்தித் துறை | 15,399 |
| 7. | சேனையில் பணிபுரியும் நிர்வாக ஊழியர் | 3,555 |
| 8. | வங்கிகள் | 6,305 |
| 9. | வாணிக, கடைச்சிப்பந்திகள் | 20,282 |
| 10. | மின்சாரத் துறை | 7,668 |
| 11. | ஆசிரியர், மருத்துவர், பொறியர்கள் | 10,482 |
| 12. | அரசாங்கச் சிப்பந்திகள் | 40,137 |
| 13. | பெட்ரோலியம் தொழிலாளர் | 3,300 |
| 14. | பல்வகைத் தொழிலாளர் | 5,874 |
| | மொத்தம் | 3,16,251 |

இத்தகைய காரணங்களால் மிக்க செல் வாக்கும் பலமும் பொருந்தியதாக ம.தொ.ச. கா. விளங்குகிறது. தேசியத் தொழில் ஆலோசனைக் கூட்டுக் குழுவிலும் பிற அர சாங்க நிறுவனங்களிலும் பதவி வகிப்பதன் மூலம் தொழிலாளர் தொழிற்சங்கம் பற்றிய கொள்கைகளை வகுப்பதில் இச்சங்கம் நல்ல பணியாற்றி வருகிறது.

மொத்தத்தில் சொன்னால், மலேசியத் தொழிற்சங்க இயக்கம் உண்மையிலேயே தொழிலாளர்கட்காக, தொழிலாளர்களால், தொழிலாளர்களைக் கொண்டே நடத்தப் படும் இயக்கமாகும். (தொடரும்)




# வெற்றித்திருநகர்

**அகிலன்**

பரத கண்டத்துக்கே அது பயங்கரமான சோதனைக் காலம். நாட்டின் வடமேற்குக் கணவாய் வழியாகப் பகைவரின் அலையலையான படைகள் பாய்ந்து வந்து நாடு முழுவதையும் சின்னாபின்னப் படுத்தியிருந்தன. இமயம் முதல் குமரி வரையிலும் இரத்தவெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது.

சோதனைக் காலத்தின் எதிர்ப்புச் சக்தியைத் தாம் ஒன்றாகத் திரண்டெழுந்து, சாதனையாக உருவெடுத்து வளர்ந்ததுதான் விஜயநகர சாம்ராஜ்யம். துங்கபத்திரா நதிக் கரையில் முளைத்தெழுந்த அந்த வெற்றித் திருநகர் பரத கண்டத்தின் தென் பகுதிக்கு ஒரு மாபெரும் அரணாகவே உயர்ந்தது.

விஜயநகர சாம்ராஜ்யத்துக்கே பொற்காலத்தைத் தோற்றுவித்து, அதன் வலிமையையும் வளத்தையும் உலகறியச் செய்தவர் சக்கரவர்த்தி கிருஷ்ண தேவராயர்.

அந்த மாவீரரின் ஆட்சிக் காலத்தில்.....

வெளிப் பகைவிலிருந்து தங்களைப் பாதுகாக்க விஜயநகரம் இருந்த காரணத்தால், தமிழ்நாட்டுச் சிற்றரசர்கள் தங்களுக்குள் உட்பகையை வளர்க்கத் தொடங்கி விட்டார்கள். உறையூரிலிருந்து ஆட்சி செய்து வந்த வீரசோழன், மதுரைத் தலைநகரில் ஆட்சி செலுத்தி வந்த சந்திரசேகர பாண்டியன் மீது போர் தொடுத்தான். அவரை மதுரையிலிருந்து துரத்திவிட்டு நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான்.

வடக்கே காபூலிலிருந்து பாபர் டில்லி சுல்தான் மீது படையெடுக்கத் திட்டமிட்டிருந்த சமயம் அது. நாட்டின் வடபகுதியிலும் ஒற்றுமையில்லை; தென்பகுதியிலும் சிற்றரசர்கள் தங்களுக்குள் இவ்வாறு பகை வளர்த்துக் கொண்டிருந்தார்கள். கிருஷ்ணதேவராயர் கொதித்தெழுந்தார்.

சந்திரசேகர பாண்டியனின் முறையீட்டைக்கேட்டுத் தம்மிடம் தளபதியாக இருந்த நாகமநாயக்கரை மதுரைக்குப் படைகளோடு செல்லுமாறு கட்டளையிட்டார் சக்கரவர்த்தி. பாண்டியருக்குரிய நாட்டை வீர சோழனிடமிருந்து மீட்டுப் பாண்டியருக்கே கொடுத்து வருமாறு ஆணையிட்டார்.

நாகமநாயக்கரின் குமாரன் விசுவநாதன் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயரிடமே வளர்ந்தவன். அவருடைய இலட்சியத்தால் உருவாக்கப்பட்டவன். அவனுக்குத் தன் தந்தை நீதியை நிலைநாட்டுவதற்காக மதுரைக்குப் படையெடுத்துச் செல்வது மிகவும் பெருமையளித்தது.

ஆனால் அப்போது விஜயநகரத்தில் அமைச்சராக இருந்த சாளுவ நரசிம்மரோ அதை வேறு விதமாக எடுத்துக் கொண்டார். நாகமநாயக்கர் அமைச்சருக்கு நெருங்கிய நண்பர். அவருடைய ஒரே குமாரனான விசுவநாதன் மீதும் அமைச்சர் பெருநம்பிக்கை வைத்திருந்தார். விசுவநாதனுக்குத் தமது குமாரத்தி லட்சுமியை மணம் செய்து கொடுக்க வேண்டுமென்ற எண்ணமும் அவருக்கு இருந்தது.

நாகமநாயக்கரோடு அமைச்சர் சாளுவர் சதி ஆலோசனை செய்து, பாண்டிய நாட்டைக் கைப்பற்றி அவரே ஆட்சி நடத்துமாறு கூறியனுப்பினார். விஜயநகரத்திலிருந்து தமிழ் நாட்டைப் பிரித்து, அதற்கு விசுவநாதனைச் சக்கரவர்த்தியாக்கிவிட வேண்டுமென்பது அமைச்சரின் திட்டம். லட்சுமியை மணந்து கொண்டு மருமகனாகப் போகும் விசுவநாதனைத் தமிழ்நாட்டுக்கே சக்கரவர்த்தியாகச் செய்து பார்த்துவிட வேண்டுமென்ற ஆசை அவருக்கு.

கிருஷ்ணதேவராயருக்கு ஏற்பட்ட விபத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர் சாம்ராஜ்யத்தில் பிளவு ஏற்படுத்த முனைந்து விட்டார்.

பாண்டிய நாட்டுக்குப் படையெடுத்துச் சென்ற விசுவநாதனின் தந்தை நாகமநாயக்கரோ, அமைச்சரின் ஆலோசனைப்படி வீரசோழனை முறியடித்து விட்டுத் தாமே நாடாளத் தொடங்கி விட்டார். சந்திரசேகர பாண்டியனிடம் அதை ஒப்படைக்கவில்லை.

நாகமநாயக்கர் செய்த துரோகம் கேட்டுக் கிருஷ்ணதேவராயர் அதிர்ச்சி அடைந்தார். நாகமநாயக்கரைக் கொன்று விட்டோ, அல்லது சிறைப்படுத்தியோ, அவரிடமிருந்து பாண்டிய நாட்டை விடுவித்துச் சந்திரசேகர பாண்டியனிடம் நாட்டைக் கொடுத்துவிட்டு வரவேண்டும் என்றார். அதற்காகச் சபை கூட்டி, நாகமரை எதிர்த்துச் செல்வதற்காகத் தம் அமரநாயக்கர்களில் யாரையாவது முன் வரும்படி அழைத்தார்.



யாருமே முன்வரவில்லை. நாகமநாயக்கரின் வீரமும் அமைச்சர் சாளுவநரசிம்மரின்சதிஆலோசனையும் அவர்களைத் தயங்கச் செய்தன. அப்போது விசுவநாதன் எழுந்து தானே தன் தந்தையின் மீது

படையெடுத்துச் செல்வதாக வாக்களித்தான். சக்கரவர்த்தியும் சபையோரும் அவன் செயல் கண்டு திடுக்கிட்டனர். சக்கரவர்த்தி அவனுக்கு அநுமதி வழங்கினார்.

செய்தி கேட்ட விசுவநாதனின் தாய் அவனைத் தடுக்க முயன்றாள். அமைச்சர் அவன் மீது வெறுப்புக் கொண்டார். லட்சுமியோ அவனிடம் மன்றாடி அந்த ஆலோசனையைக் கைவிட்டுவிடும்படி கெஞ்சினாள். விசுவநாதன் எந்தக் காரணத்துக்காகவும் சக்கரவர்த்தியின் ஆணையை மீற முடியாது என்று மறுத்தான். சாம்ராஜ்யத்து ஊழியன் என்ற முறையில் அரசநீதிக்கு எதிராகப் பதவி, பாசம், காதல் எதையுமே அவன் பொருட்படுத்தவில்லை.

அரியநாதமுதலியாருடன் பாண்டிய நாட்டுக்குப் படையெடுத்துச் சென்றான் விசுவநாதன். அவனுடைய தந்தை நாகமரோ அவன் பொருட்டே தாம் மதுரையைக் கைப்பற்றியிருப்பதாகவும், அவனும் தம்மோடு சேர்ந்து கொண்டால் தமிழ் நாட்டுக்கே அவன் சக்கரவர்த்தியாக விளங்கலாம் என்றும் கூறினார். விசுவநாதனா அதற்குஉடன்படுபவன்? தந்தையோடுபோரிட்டு அவரை முறியடித்துச் சிறைப்படுத்தினான். மதுரையில் தன் படைவீரர்களை நிறுத்திவிட்டு, சிறைப்படுத்தப்பட்ட தந்தையோடு விஜயநகரத்துக்குத் திரும்பினான்.

சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் விசுவநாதனுக்கு மகத்தானதொரு வரவேற்புக்கு ஏற்பாடு செய்து, அவனது நேர்மைத் திறனைப் பாராட்டி, அவனுக்கு வீரவாள் பரிசளித்தார். அமைச்சர் சாளுவநரசிம்மரோ அவன் மீது ஆத்திரம் கொண்டு அவனைத் தண்டிக்க முயன்றார். விசுவநாதனின் விழாவில் கலந்துகொள்ள அவர் லட்சுமிக்குத் தடை விதித்தார்.

சக்கரவர்த்தியிடம் உடைவாளைப் பரிசாகப் பெற்ற விசுவநாதன், தன்னுடைய தந்தைக்காகவும் சக்கரவர்த்தியிடம் மன்றாடினான். விசுவநாதனின் நேர்மைத் திறனுக்குப் பரிசாக அவனுடைய தந்தைக்கும் விடுதலை கிடைத்தது. நாகமநாயக்கரும் தம் துரோகத்துக்காகப் பெரிதும் வருந்தி மனம் திருந்தினார்.

ஆனால் சாளுவநரசிம்மரோ தமது சூழ்ச்சியின் தோல்வியை ஒப்புக் கொள்ளச் சித்தமாக இல்லை. விசுவநாதனும் நாகமநாயக்கரும் இப்போது ஒன்றுபட்டு விட்டதால், விசுவநாதனுக்குப் பதிலாக வேறோர் இளைஞனைத் தேர்ந்தெடுத்தார் அவர். விஜயநகரத்துக்கு எதிரான அவருடைய சாம்ராஜ்யக் கனவை நனவாக்கச் சேரநாட்டு இளவரசன் உதயமார்த்தாண்டவர்மன் கிடைத்தான். லட்சுமியின் பேரழகு அவனைக் கிறங்கச் செய்தது.

சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் தம் வாழ்நாளின் முடிவை முன்கூட்டி உணர்ந்தவரேபோல், அந்த ஆண்டின் மகாநவமித் திருவிழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாட விரும்பினார். விழாக் கொண்டாடும் அதே சமயத்தில் சாம்ராஜ்யத்தின் சிற்றரசர்கள் அனைவரையும் ஒன்றுகூட்டி, அவர்களிடம் ஒற்றுமையின் அவசியத்தை வலியுறுத்தத் திட்டமிட்டார்.

விழா நிகழ்ச்சிகளின்போது விசுவநாதனுக்கும் உதயமார்த்தாண்டனுக்கும் மல்யுத்தம் நடைபெற்றது. சேர நாட்டின் செருக்குமிக்க மல்லன் என்று பெயர் பெற்றிருந்த உதயமார்த்தாண்டன் விசுவநாதனிடம் தோல்வியுற்றான். லட்சுமியின் கண் முன்னே அவன் பெற்ற தோல்வி அவனுக்கு விசுவநாதனிடம் வெஞ்சினத்தைத் தூண்டி விட்டது. சாளுவநரசிம்மரும் இதையே எதிர்பார்த்திருந்தார்.

கிருஷ்ணதேவராயர் தம் உடல்நலக் குறைவைப் பொருட்படுத்தாமல் விழாக்களில் கலந்து கொண்டதால், மிகவும் பாதிக்கப்பட்டிருந்தார். கடைசி நாள் விழாவையும் குறைவின்றி முடித்துவிட்டு, படை வீரர்களை மேற்பார்வையிட்டுவிட்டு, அவர் சபை கூட்டினார். விருந்தினர்களாக வந்திருந்த சிற்றரசர்களிடம் அவர்கள் ஒற்றுமையோடு வாழ்ந்தாலே விஜயநகர சாம்ராஜ்யம் நிலைத்திருக்குமென்றும், சாம்ராஜ்யம் நிலைத்திருக்கும் வரையில்தான் அவர்களும் பாதுகாப்போடு வாழ முடியும் என்றும் கூறினார்.

அவருக்குப் பின்னேயும் சாம்ராஜ்யம் நிலைத்திருக்க வேண்டும் என்பதற்காக அவர் ஒற்றுமையை வலியுறுத்தி வந்த அதே சமயத்தில்.....

வேற்றுமை உணர்ச்சியின் விளைவான கலவரங்கள் தமிழ் நாட்டில் தோன்றிவிட்டன என்ற செய்தி அவருக்கு எட்டியது. சாளுவநரசிம்மரும் உதயமார்த்தாண்டனும் தூண்டிவிட்ட கலவரங்கள் பாண்டிய நாட்டையே பாழ்படுத்த முனைந்துவிட்டன. ஒற்றுமையின் உயிர்மூச்சாய் விளங்கிய கிருஷ்ண தேவராயருக்கு, இந்த வேற்றுமையின் வெறிச் செயல்கள் அவர் உயிர்மூச்சையே குடிக்கும் கூற்றாக அமைந்து விட்டன.

விசுவநாதனை உடனடியாகப் படையுடன் தெற்கே விரைந்து போகச் சொன்னார். தாம் தனிப்பட்ட முறையில் சேமித்திருந்த திரவியங்களையும் தமிழ்நாட்டு மக்களின் நல்வாழ்வுக்காக எடுத்துச் செல்லும்படி கூறினார். அதே சமயம் அதிகார ஆசையால் நாட்டில் கலவரங்களைத் தூண்டி விடுபவர்களைக் கடுமையாகத் தண்டிக்கும்படியும் கட்டளையிட்டார்.

இந்தப் பேரதிர்ச்சி அவருடைய உயிரையே பறித்து விட்டது. சிங்காதனத்தில் வீற்றிருந்தவாறே உயிர் துறந்தார் அந்த மாமன்னர்.

அவரை அடுத்துச் சிங்காதனத்துக்கு வரவிருந்த அச்சுதராயரோ வலிமையற்றவர். அமைச்சர் சாளுவநரசிம்மரின் கைப் பாவை. விஜயநகரத்தின் நிலைமை என்ன? தமிழ்நாட்டின் நிலைமை என்ன ஆயிற்று ?

விழா முடிந்தவுடன் சக்கரவர்த்தி கிருஷ்ண தேவராயரின் ஆசியோடு லட்சுமியின் கரம் பற்றத் துடித்துக் கொண்டிருந்தான் விசுவநாதன். லட்சுமியும் ஒவ்வொரு நாளும் அதையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் எதிர்பார்ப்பவை எல்லாமே இவ்வுலகில் அவ்வளவு எளிதாக நடந்து விடுகின்றனவா, என்ன ?

## முதல் அத்தியாயம்

# அமைச்சரின் கட்டளை

மீகாமனில்லாத மரக்கலமாகி விட்டது விஜயநகரம். வடக்கிலும் தெற்கிலும் சுற்றிலும் பகைப் புயல் சூழ்ந்த பெருங்கடலாகக் கொந்தளித்த பரத கண்டத்திடையே, விஜயநகர சாம்ராஜ்யமெனும் பெருங்கலத்தைச் செலுத்தி வந்த ஒப்புயர்வற்ற மாமன்னர் மறைந்து விட்டார்.

உட்பகையெனும் இரத்தக் கறை படிந்த வரலாற்று ஏடுகள் நிறைந்த இந்தப் பரத கண்டத்தின் தலைவிதியையே மாற்றி அமைக்கத் துணிந்த மாவீரர் மாண்டு போனார். ஒற்றுமையே வாழ்வென்று உணர்ந்த அந்த விடிவெள்ளி, அதை உணர்த்த வந்த விடிவெள்ளி, பொழுது புலருமுன்பே மறைந்து விட்டது.

விஜயநகரமே அழுது புலம்பியது; விஜயநகரமெங்கும் அன்றே மரணக் களை குடிபுகுந்து விட்டது. பல ஆண்டுகள் கழிந்த பிறகு, அந்த நகரம் தனி வாழ்வை இழந்ததென்றாலும், அதற்கான அடிகோலி கிருஷ்ண




தேவராயர் அதைவிட்டு மறைந்த அன்றைக்கே புலப்பட்டு விட்டது.

எல்லாமே முடிந்து போய், புதிய மாற்றங்கள் அங்கே ஏற்படத் தொடங்கிவிட்டன.

விசுவநாதன் மதுரைக்கு இன்னும் படைகளோடு புறப்படவில்லை. புதிய சக்கரவர்த்தி அச்சுதராயரிடமிருந்து அவன் ஆணையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஆணை பிறக்குமா, பிறக்காதா என்பதே ஐயத்துக்கிடமாக இருந்தது. நாகம நாயக்கருக்கும் அரியநாத முதலியாருக்கும் ஏதும் புரியவில்லை. சக்கரவர்த்தியின் மரணத்துக்குப் பிறகு பொறுப்பேற்றுக் கொண்ட அச்சுதராயர், அன்றுதான் சபை கூட்டுவதாக அறிவித்திருந்தார்.

சாளுவ நரசிம்மரை விட்டு அச்சுதராயரைப் பிரித்துக் காண்பதே சிரமமாக இருந்தது. சக்கரவர்த்தி அச்சுதராயர்தாம் என்றாலும், அவர் சார்பில் சாளுவ நரசிம்மரே அரசாங்க அலுவல்களைக் கவனிக்கத் தொடங்கி விட்டார். தெற்கில் தமிழ்நாட்டிலிருந்து பயங்கரமான செய்திகள் தலைநகரத்துக்கு வந்தவண்ணமாக இருந்தன. ரெய்ச்சூர் கல்தான் ஆதில்ஷாவும் ரெய்ச்சூரைக் கைப்பற்றுவதற்கு மீண்டும் முயற்சிகள் செய்வதாக ஒற்றர்கள் வந்து அறிவித்தனர்.

விசுவநாதனின் மாளிகையில் விசுவநாதனும் அரியநாத முதலியாரும் ஆலோசனை செய்து கொண்டிருந்த போது, அவர்களுக்கருகில் கலக்கத்தோடு வந்து அமர்ந்தார் நாகம நாயக்கர்.

''சபையில் இன்று முடிவு தெரியுமென்று நினைக்கிறேன்'' என்றான் விசுவநாதன்.

''நீ மதுரைக்குச் செல்வது பற்றியா?''

''ஆமாம்'' என்றான் விசுவநாதன்.

''அநேகமாக இந்த முடிவு மாற்றப்படும் என்று நினைக்கிறேன்'' என்றார் நாகம நாயக்கர்; ''இப்போது விஜயநகரத்தையே ஆதில்ஷாவிடமிருந்து காக்க வேண்டிய அவசியம் திடீரென்று நமக்கு ஏற்பட்டிருக்கிறது. சக்கரவர்த்திக்காக அஞ்சியிருந்தவர்கள் இனி அப்படி இருக்க மாட்டார்கள். ஆகவே, நம்முடைய படை வீரர்களைப் பிரித்துப் பாண்டிய நாட்டுக்கு அழைத்துச் செல்வது எவ்வளவு தூரத்துக்கு ஏற்றது என்பது புலப்படவில்லை. மேலும் சக்கரவர்த்திகளின் பொக்கிஷத்திலிருந்த பணத்தையும் அச்சுதராயர் தமிழ்நாட்டுக்காகச் செலவிடுவார் என்று கூற முடியாது......''

''அப்படியானால் தமிழ் நாட்டின் நிலை?'' என்று கலக்கத்தோடு கேட்டான் விசுவநாதன்.

''சாம்ராஜ்யத்தின் நிலையே இப்போது தத்தளித்துக் கொண்டிருக்கிறது. இந்தச் சமயத்தில் நம்மால் அங்கு அமைதியை நிலைநாட்ட முடியுமென்று தோன்றவில்லை'' என்று நம்பிக்கையிழந்து பதிலளித்தார் நாகமநாயக்கர்.

விசுவநாதனுக்குத் தன் உடல் வலிமையும் உள்ளத்தின் ஆற்றலும் அந்தக் கணத்திலேயே குன்றி விட்டது போல் தோன்றியது. அந்த ஒரு மனிதரின் அருமை அவரது பிரிவுக்குப் பின்னரே அவனுக்கு மேலும்



"என் பையன் மொத்தம் 520 மார்க் வாங்கியிருக்கிறான் அவனுக்கே இடமில்லை என்கிறீர்களே ?"

"கோபப்படாதீங்க! அந்த மார்க்குக்கு ஒரு மெடல் வேணுமானாலும் நான் கொடுக்கிறேன். அட்மிஷன் கேட்காதீங்க !"

தெளிவாகப் புலப்பட்டது. தன் கண்களை இறுக மூடிக் கொண்டு, "சக்கரவர்த்திகளே! தாங்கள் என்னைப் பொறுத்தவரையில் இறக்க வில்லை. என் உள்ளே உயிராக நீங்கள் என் உயிருள்ள வரையிலும் சுடர் விடுவீர்கள். ஒரு விநாடியும் தங்களை நான் மறக்க மாட்டேன்!" என்று தனக்குள் உறுதி கூறிக் கொண்டான் அவன்.

அரண்மனையில் சபை கூடி விட்டது. புதிய சக்கரவர்த்தி அச்சுதராயரின் அருகில் வீற்றிருந்தார் அமைச்சர் சாளுவ நரசிம்மர்.

"விசுவநாதா! சக்கரவர்த்திகள் உனக்கிட்ட ஆணை அவர்களுடைய கடைசி ஆணையாகும். அதை நீ அவ்வாறே நிறைவேற்ற வேண்டுமென்று நானும் விரும்புகிறேன். படைகளோடும் பொக்கிஷத்தோடும் நீ பாண்டிய நாட்டுக்குச் செல்லலாம். விரைவில் அதற்கான ஏற்பாடுகளை முடித்துக் கொண்டு புறப்படு!"

விசுவநாதனுக்குத் தன் செவிகளையே நம்ப முடியவில்லை. அமரநாயக்கர்கள் பலர் பேரதிர்ச்சியுற்றவர்கள் போல் காணப்பட்டனர். ராமராயர் இந்த முடிவு கேட்டுத் திடுக்கிட்டவர்போல் எழுந்தார்.

"பெரிய சக்கரவர்த்திகளின் கடைசி ஆணையை நிறைவேற்றி வைக்க வேண்டுமென்று சக்கரவர்த்திகள் விரும்புவது முற்றிலும் நியாயம்தான். ஆனால் அப்படி அவர்கள் ஆணையிட்ட போது அவர்களுடைய அந்த முடிவு அவ்வளவு நெருக்கத்திலிருக்குமென நினைத்திருக்க மாட்டார்கள். நிலைமை இப்போது அடியோடு மாறி விட்டது. விசுவநாதனும் நம்முடைய மற்ற வீரர்களும் இப்போது இங்கே இருக்க வேண்டியவர்கள். சாம்ராஜ்யத்தைக் காக்கும் பொறுப்பை நாம் மறந்துவிடக் கூடாது."

"ஆம்; ராமராயர் அவர்கள் கூறுவதையும் தீர ஆலோசித்து முடிவுக்கு வரவேண்டும்" என்றார் மற்றோர் அமரநாயக்கர். பலரும் ராமராயர் கூறியதையே ஆமோதித்தனர்.

அச்சுதராயர் ஏதும் மறுமொழி கூறவில்லை. அமைச்சர் சாளுவநரசிம்மரைத் திரும்பிப் பார்த்தார். அச்சுதராயர் செய்த முடிவு அமைச்சர் செய்த முடிவு என்பது விசுவநாதனுக்கும் விளங்கிவிட்டது.

சாளுவ நரசிம்மர் எழுந்து கூறலானார் :

"தமிழ்நாடும் நம் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்ததுதான். அங்கே கலவரம் நடப்பது தெரிந்தும் நாம் அதை அடக்காவிட்டால், அதையே நம் பலவீனம் என்று நினைத்துக் கொள்வார் ஆதில்ஷா. அப்போதுதான் நமக்கு ஆபத்து ஏற்பட வழி இருக்கிறது. மேலும் நம்முடைய படைகள் அவ்வளவுமே விஜயநகரத்தைக் காப்பதற்கு இங்கு அவசியமில்லை. தவிரவும் நாம் பெரிய சக்கரவர்த்திகளின் கடைசி ஆணையை மீறினோம் என்ற அவச் சொல்லும் நமக்கு ஏற்படக் கூடாது !"

சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் உயிரோடிருந்த போதே அவருடைய ஆணையை மீறுமாறு நாகமநாயக்கருக்கு ஆலோசனை கூறியவர் சாளுவநரசிம்மர். அவர் இப்படிக் கூறியதுதான் நாகமநாயக்கருக்கே திகைப்பை அளித்தது. அவர் ஏதோ தமக்குள் ஒரு திட்டத்தை வைத்துக் கொண்டு பேசுகிறார் என்பதும் நாகமருக்கு விளங்கி விட்டது. என்றாலும் சபையில் அவரை எதிர்த்துப் பேச விரும்பவில்லை நாகம நாயக்கர்.

சாளுவ நரசிம்மர் திடீரென்று ஒரே நாளில் உயர்ந்து விட்டார். அச்சுதராயருக்கும் மேலாக அவர் உயர்ந்து விட்டார். அதிகாரங்கள் அனைத்தும் அவரிடமே இப்போது குவிந்திருந்தன. பழைய நண்பரில்லை அவர். ஆகவே, நாகமர் ஏதும் பேசவில்லை.

"விசுவநாதா! நீ என்ன கூறுகிறாய்?" என்று கேட்டார் அச்சுதராயர்.

"சக்கரவர்த்திகளின் ஆணை எதுவோ அதை நிறைவேற்றுகிறேன். குமரி முதல் கலிங்கம் வரையிலும் எனக்கு ஒன்றுதான். என்றுமே எனக்கு இந்த விஜயநகரம்தான் காட்சியளிக்கிறது. இந்த விஜயநகரத்து மண்ணையும் மக்களையும் எப்படிப் பாதுகாப்பேனோ, அதே போல்தான் பாண்டிய நாட்டையும் பாதுகாப்பேன்!" — விசுவநாதனின் குரல் தழுதழுத்தது.

சபை கலைந்து அவன் தன் மாளிகைக்குத் திரும்பினான். ஏனோ என்றுமில்லாதபடி அவன் மனம் சோர்ந்து களைத்திருந்தது. வழியில் சாளுவநரசிம்மரின் மாளிகைக்குள் அவனால் நுழையாமலிருக்க முடியவில்லை. நுழைந்து லட்சுமியிடம் செய்தியைக் கூறினான்.

"என் அப்பா என்ன நினைக்கிறார்கள் என்றே எனக்குத் தெரியவில்லை. ஆனால்.... அவர்கள் நல்ல எண்ணத்தோடு உங்களை அங்கு அனுப்பவில்லை. கூடுமானால் வேறு யாரையாவது அனுப்பச் சொல்லுங்கள்" என்றாள் லக்ஷ்மி.

வருத்தத்தோடு சிரித்தான் விசுவநாதன். "நான் போகத்தான் வேண்டும் லட்சுமி ; ஆனால் எங்கு போனாலும் உன்னையும் என் னுள்ளே சுமந்து கொண்டுதான் செல்வேன்!" என்றான் விசுவநாதன்.

(தொடரும்)

# அசுத்தமான ரத்தமே சரும வியாதிகளின் காரணம்!



**சரும வியாதிகள் அகல—**

- சருமத்தைப் பாதுகாத்து, கிருமிகளை ஒழிக்கக்கூடிய
- உடம்பிலுள்ள ரத்தத்தைச் சுத்தப்படுத்தி சருமப் பகுதிகளுக்குப் புத்துயிர்ப்பு அளிக்கக்கூடிய வைத்தியம் தேவை. இதற்காக, டாக்டர் ரிச்லே (Dr. Richelet) என்ற பிரஞ்சு நிபுணர் மூன்று மருந்துகளைத் தயாரித்திருக்கிறார். குணமளிக்கும் தன்மைக்கு உலகப் புகழ் பெற்ற அவை.




**ரிச்லேஸ் பிளட் பியூரி:பையர்** (RICHELET'S BLOOD PURIFIER) சொறி சிரங்கு, கட்டிகள், முகப் பருக்கள், படை போன்ற பெரும்பாலான சரும வியாதிகள் அகலச் சிறந்த மருந்து. ரத்தத்தைச் சுத்தி செய்கிறது. விருத்தி செய்கிறது.

**கல்லாஸ் ஆயின்ட்மென்ட்** (GALLA'S OINTMENT) கொதித்துச் சீழ் வடியும் சொறி சிரங்குகள், வெட்டுக் காயங்கள், புண்களுக்கு ஏற்ற மருந்து. சக்தி வாய்ந்த கிருமிநாசினி.

**ரிச்லேஸ் லாக்ஸட்டிவ்** (RICHELET'S LAXATIVE) மலச்சிக்கலை அகற்றுகிறது. ஜீரண சக்தி அதிகரிக்கச் செய்து, ஆகாரம் உடலோடு ஒட்டச்செய்கிறது. அதனால் ரத்தவிருத்தி ஏற்படுகிறது.

# ரிச்லேஸ்

## பிளட் பியூரி:பையர்

எல்லா மருந்துக் கடைகளிலும், ஸ்டோர்களிலும் கிடைக்கும்.
விவரங்கள் அறிவிக்கும் இலவச அறிவிப்புக்கு (FOLDER) எழுதுங்கள்.
இந்தியாவெங்கும் ஏஜண்டுகள் தேவை. விண்ணப்பிக்கவும்

*இந்தியாவில் ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:*

**மஹாஸ்வரி ஜெனரல் ஸ்டோர்ஸ்.**

19/35, பெரிய கடை வீதி, கோயமுத்தூர் - 1.





# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன் - அருந்தமா

ஐந்தாம் பாகம்

## எதிர்காலம்

**சா**ரதா மாதர் சங்கத்தின் பொன் விழா மாம்பலம் சாரதா வித்தியாலயத்தில் 1962ம் ஆண்டு ஜனவரி மாதம் 21 - ஆம் தேதி கொண்டாடப்பட்டது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. ஜனவரி மாதத்தில் அநேகமாக ஒவ்வொரு நாளுமே வானம் நிர்மலமான நீலமாகத் தோன்றும், அஸ்தமன சூரியன் அதற்குப் பொன்னொளி கூட்டும் என்றாலும் இன்றையதினம் பளிச்சென்று விசேஷப் புதுமையுடனும் விளங்கியது. ஒரு வாரம் முன்புதான் பொங்கல் திருநாளை மக்கள் கொண்டாடியிருந்தனர். திருமலைப் பிள்ளை சாலையில் டாக்ஸியில் நான் சென்று கொண்டிருந்தேன். இருபுறமும் உள்ள பிரும்மாண்டமான தூங்குமூஞ்சி மரங்களின் கிளைகள் மேலே கூடி விதானம் விரித்த அந்த அகலமான பாதையில் டாக்ஸி விரைகையில் நான் ஜன்னல் வழியே பார்த்தபோது மாடுகளின் கொம்புகளில் பூசப்பட்டிருந்த சிவப்பு, பச்சை வர்ணங்கள், இன்னும் அழியாமல் இருப்பதைக் கண்டேன். சில மாடுகளின் கழுத்துக்களில் கட்டப்பட்டிருந்த சதங்கைகள் ஜல் ஜல் என்று ஒலி எழுப்பிக் கொண்டிருந்தன. தெருவில் நடந்து சென்ற ஆடவரும் பெண்டிரும் குழந்தைகளும் கூட, கோலாகலப் பொங்கல் விடுமுறை இன்னும் நீடித்திருப்பது போன்றதோர், ஆனந்தத்துடன் காணப்பட்டனர்.

டாக்ஸி ஒரு மூலை திரும்பியது. வலதுபக்கம் ராமகிருஷ்ண மிஷன் சாரதா வித்யாலயா ஹைஸ்கூலின் அழகிய விசாலமான தோட்டத்தின் நுழைவாயில் இருந்தது. பள்ளிக்கூடத்தின் கட்டிடம் புல் தரைகளுக்கும், மரங்களுக்கும் புஷ்பப் பாத்திகளுக்கு மிடையில் பெரிதாகக் கம்பீரமாக, வெள்ளை வெளேரென்று காட்சியளித்தது. ஓரிரண்டு வாரங்களுக்கு முன் அந்தப் பள்ளியின் தலைவி எஸ். சுப்புலக்ஷ்மியுடன் நான் பேசிக் கொண்டிருந்தது என் நினைவுக்கு வந்தது. அவள் பதினோரு வயதுச் சிறுமியாக இருந்தபோது துரதிர்ஷ்டவசமாகத் தன் கணவனை இழந்து விட்டாள். சிறிது காலத்துக்குப் பிறகு டி. பி. கோயில் தெருவில் இருந்த விதவை இல்லத்தில் அவள் பெற்றோர்களால் சேர்க்கப்பட்டாள். அங்கு தங்கிப் படித்துத் தேறிய அவள் பராமரிப்பிலேயே இன்று 1800 பெண்களுக்கு மேல் இருந்தனர். அவர்களில் தொண்ணூறு சதவீதம் பேர்கள் பள்ளியை விட்ட பிறகும் மேல் படிப்பைத் தொடருவார்கள் என்று அவள் கூறினாள். இந்நாட்களில் பையன்களைப் போலவே பெண்களையும் படிக்க வைப்பது ஒரு முதலீடாகக் கருதப்படுகிறது. பெண்ணாய்ப் பிறந்து விட்டதால் இன்று ஒருத்திக்கு உத்தியோகம் கிடைக்காமல் போய் விடாது. அதோடு கல்யாண மார்க்கெட்டிலும் இன்று பட்டதாரிப் பெண்களுக்குக் கிராக்கி இருக்கிறது. சென்னை மாநகரில் மட்டுமே ஐந்து பெண் கல்லூரிகள் உள்ளன. இவை தவிர, வைத்தியக் கல்லூரி

போன்ற தொழில் கல்லூரிகளிலும் வேறு பல கல்லூரிகளிலும் பெண்களும் ஆண்களோடு சரிநிகர் சமானமாக அமர்ந்து படிக்கின்றனர். இன்று இவை சர்வ சகஜமாகத் தோன்றுகின்றன.

டாக்ஸி மீண்டும் ஒரு முறை திரும்பியது. இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம் சாரதா வித்தியாலயா பயிற்சிப் பள்ளிக்கு முன் நின்றது. அங்கு சுமார் முந்நூறு பெண்கள் ஆரம்பப் பள்ளி ஆசிரியைகளாக விளங்கப் பயிற்சி பெற்று வருகின்றனர்.

மாணவிகளாக இருக்க வேண்டும் என்று நான் அனுமானித்த சில இளம் பெண்கள் கூட்டம் நடக்கவிருந்த கூடத்தின் வாசலில் நின்று கொண்டிருந்தனர். ஒருத்தி கையில் தட்டு நிறையப் பூக்கொத்துக்கள் இருந்தன. விருந்தினர் ஒவ்வொருவரும் இதில் ஒவ்வொன்றை எடுத்துக் கொண்டனர். மற்றொருத்தி வெள்ளிக் கிண்ணத்தில் சந்தனம் வைத்துக் கொண்டிருந்தாள். மூன்றாவதாக ஒரு பெண் பன்னீர்ச் செம்பை வைத்துக் கொண்டு, வந்தவர்கள் காலணிகளைக் கழற்றி விட்டு உள்ளே செல்லும்போது பன்னீர் தெளித்தாள்.

நான் கூடத்துக்குள் நுழைந்தபோது அங்கு ஏற்கெனவே கூட்டம் நிரம்பி விட்டிருந்தது. எப்படியோ நான் ஒரு நாற்காலியைப் பிடித்துக் கொண்டேன். என்னைச் சுற்றிப் பல பெண்கள் அமர்ந்திருந்தனர் — தாய்மார்கள், பெண்கள், பாட்டிகள், பேரக் குழந்தைகள். அவர்களில் அநேகம் பேர்களின் நினைவுகள் நாற்பது வருடங்கள் பின்னோக்கிச் சென்று முதன் முறையாகச் சாரதா மாதர் சங்கத்தின் கூட்டம் நடைபெற்ற தினத்தில் லயித்திருக்கலாம். மேடையின் ஒரு புறமாகப் பரிசு வாங்கவிருந்த பெண்கள் தரையில் சப்பணமிட்டு அமர்ந்திருந்தனர். அவர்கள் வதனங்கள் பரபரப்பின்றி அமைதியாக இருந்தன. மேடையின் மறுபுறத்தில் பகவான் பாலகிருஷ்ணனுடைய மண் பொம்மை ஒன்று இருந்தது. அதன் கழுத்தில் தொங்கிய புதிய ரோஜா மலர் மாலைக்கு மேலே கண்ணனின் நீல முகத்தில் குறும்புப் புன்னகை மலர்ந்திருந்தது.

சகோதரி சுப்புலக்ஷ்மி பழுப்பு நிறப் பட்டுப் புடவை உடுத்திச் சுறுசுறுப்பாக வளைய வந்து விருந்தினர்களை வரவேற்பதும், நாம் கவனியாதபோது வந்து உட்கார்ந்து விட்ட சிலருக்கு முகமன் கூறுவதுமாக இருந்தார். வெள்ளி இழைகள் நிறைந்த அந்தத் தலை என் பார்வையிலிருந்து மறைந்தது ஒரு கணத்துக்கு. அடுத்த கணம் அவர் பேச்சாளர்களை மேடைமீது அழைத்துச் சென்று கொண்டிருப்பதைக் கண்டேன். பிரார்த்தனை கீதம் பாடுவதற்காக மேடைமீது தோன்றிய பெண்களைப் பார்த்ததும் எல்லோரும் எழுந்து நின்றனர்.

பார்வதி ஒரு முறை என்னிடம் குறிப்பிட்டது என் நினைவுக்கு வந்தது இப்போது. "நாங்கள் நால்வரும் — அதாவது, ஸி. சுப்புலட்சுமி, தர்மாம்பாள், செல்லம், நான் ஆகியோர் — திருவல்லிக்கேணி ஹைஸ்கூலில் நூறு பெண்கள்கூட இல்லாதபோது விதவை இல்லத்தில் சேர்ந்தோம். இப்போது நாங்கள் நால்வருமாகச் சேர்ந்து ஏழாயிரம் மாணவிகளைக் கொண்ட பள்ளிகளை நிர்வகித்து வருகிறோம். இந்த எண்ணிக்கையைப் பல மடங்காகப் பெருக்கிப் பார்த்தால் ஓரளவு சகோதரி சுப்புலக்ஷ்மியின் சாதனைகளை எண்ணிக்கை அளவில் கணக்கிடலாம்."

பிரார்த்தனை முடிந்து விட்டது.

எல்லோரும் மீண்டும் அமர்ந்தபோது பட்டுப் புடவைகளின் சலசலப்பு காற்றின் எதிரொலி போல் ஒலித்தது. தொடக்க உரையை நான் கேட்க முயன்றேன். ஆனால் என்னால் முடியவில்லை. பத்து வருடங்களுக்கு முன் தன்னுடைய எண்பத்தைந்தாவது வயதில் லண்டனில் இறந்து விட்ட மிஸஸ் ட்ரைஸ்டேலைப் பற்றி நான் நினைத்துக் கொண்டிருந்தேன். அச்சமயம் மிஸ் பிரேகர் சகோதரிக்கு இவ்வாறு எழுதியிருந்தாள். "மிஸஸ் ட்ரைஸ்டேல் பாரத நாட்டுக்காகப் பெரிய சாதனைகளைப் புரிந்தவள். சிறந்த இந்திய தேசியவாதிக்கு ஒப்பானவள். அங்கு கல்வித் துறைக்காகச் சலிப்பின்றி நிறைய நிறைய உழைத்தவள். பெண் கல்விக்காகவும் விதவைகளின் புனர் வாழ்வுக்காகவும் நாம் போராடிய அந்த ஆரம்ப நாட்களில் நாம் மூவரும் ஒன்றாக இருந்தோம். இப்போது நீயும் நானும் மட்டுமே இருக்கிறோம். இந்த மானிட வாழ்க்கையினின்று நாம் இருவருமே விடைபெற்றுக் கொள்ளு முன்னர் ஒரு முறை நான் உன்னைப் பார்க்க ஆசைப்படுகிறேன்..."

சகோதரி, மிஸ் பிரேகரைச் சென்னைக்கு வந்து விடும்படியும், வித்தியாலயத்திலேயே மாணவிகளுக்கு ஆங்கிலம் கற்றுத் தரும்படியும் அழைத்தார் என்பதை நான் அறிந்திருந்தேன். ஆனால் மிஸ் பிரேகரால் வர முடியவில்லை. எனினும் தான் மிகுந்த சிரத்தையுடன் தன் அலுவல்களைக் கவனித்துக் கொண்டு சந்தோஷமாக வாழ்ந்து வந்த சென்னைக்குத் திரும்பவும் வரவேண்டும் என்ற ஏக்கம் அவளுக்கு இருப்பது அவள் கடிதங்கள் வாயிலாக நன்கு தெரிய வந்தது.

ஒலிபெருக்கியின் முன் வேறு ஒரு பெண்மணி நின்றுகொண்டிருந்தாள். நான் நிமிர்ந்து கேட்க ஆரம்பித்தேன். சகோதரி சுப்புலக்ஷ்மி சாரதா மாதர் சங்கத்தின் செயலாளராக ஐம்பது ஆண்டுகள் இருந்து வந்திருப்பதைக் கொண்டாடும் வகையில் சாரதா வித்தியாலயா ஆசிரியைப் பயிற்சிப் பள்ளியின் முன் அவரது உருவச் சிலை ஒன்றை நிறுவ வேண்டும் என்று மாதர் சங்க அங்கத்தினர்கள் தீர்மானித்தார்களாம். இந்தத் திட்டத்தைப் பற்றி அறிந்ததும் சகோதரி அதை எதிர்த்துத் தடை விதித்து விட்டாராம். அவர் மனத்தை மாற்ற இயலாது. உபகாரச் சம்பளம் தந்தோ, ஏழை மாணவிகளுக்கு இன்னும் பல விதங்களில் உதவியோ திரட்டிய பணத்தை நல்ல வகையில் பயன் படுத்தலாம் என்று சகோதரி கூறிவிட்டாராம். எட்டு ஆண்டுகளுக்கு முன் திறந்து வைக்கப்பட்ட அவரது

CIBA




Binaca Baby Powder, Mummy p-l-e-a-s-e. I want to be soft, velvet-smooth and kissable... like baby. CIBA has even added Bradosol, the gentlest antiseptic for baby's skin protection. I want to be protected too, please.

**baby powder with a gentle baby-antiseptic**

உருண்டை ஊட்டம் ஒன்றே போதும் என்று கூறி விட்டாராம். இப்படி அந்தப் பெண்மணி பேசிக்கொண்டு போனாள். சகோதரியால் ஆரம்பித்து வைக்கப்பட்டவையும், சகோதரியின் சுறுசுறுப்பான நிர்வாகத்திறனால் இன்னமும் பயன் பெற்று வருபவையுமான ஸ்தாபனங்களைச் சிறந்த முறையில் தொடர்ந்து நடத்துவதே அவருக்கு உண்மையான ஞாபகச் சின்னமாகும். கடந்த பத்து ஆண்டுகளில் சகோதரியினுடைய அலுவல்கள், பணிகள் அளவில் பெருகி யிருந்தன. சென்னை சட்டசபை அங்கத்தினராக அவர் சேவை புரிந்திருக்கிறார். சர்க்கார் ஊழியத்திலிருந்து ஓய்வு பெற்ற பிறகு அவர் இந்திய மாதர் சங்கத்தின் காரியங்களில் முக்கிய பங்கெடுத்து வருகிறார். அவர் புரிந்துள்ள சமூக சேவைக்காக இந்தியக் குடியரசு, பட்டமும் பதக்கமும் வழங்கி அவரைக் கௌரவித்திருக்கிறது. இத்தகைய பட்டம், பதவிகளெல்லாம் அவருக்கு மகிழ்ச்சியை அளிக்காமலில்லை. எனினும் இவை அவ்வளவு முக்கியமானவையாக அவருக்குத் தோன்றவில்லை. கீர்த்திக்காக அவர் என்றும் ஆசைப்பட்டதில்லை. தங்கள் திறமைகளையெல்லாம் உணர்ந்து உபயோகப் படுத்திச் சமூகத்துக்குப் பயன்படும் வகையில் வாழப் பெண்களுக்குக் கற்றுத் தரவேண்டும் என்ற ஒரே ஆசைதான் அவருக்கு அன்றும் இருந்தது; இன்றும் நீடித்திருக்கிறது.

இவை அனைத்தும் உண்மை என்பதை நான் அறிவேன். கடந்த இருபத்தி நான்கு ஆண்டுகளில் தாம் என்னென்ன புதிய ஸ்தாபனங்களை நிறுவ உதவியிருக்கிறார் என்பதைச் சகோதரி சிறிதளவு எனக்குக் கூறியிருக்கிறார். இரண்டாவது உலக யுத்தத்தின்போது — சிரமம் மிகுந்த அந்த நாட்களிலும் — அவர்களுடைய குடும்பக் காலனியிலேயே சகோதரியும் அவரது தங்கைகளும் ஒரு பள்ளிக்கூடம் நடத்தியதைப் பற்றி நான் அறிந்திருக்கிறேன். இப்போது அந்தப் பள்ளிக்கூடம் படிப்பு வசதிகள் குறைவாக உள்ள ஓர் இடத்துக்கு மாற்றப்பட்டிருக்கிறது. கடந்த சில ஆண்டுகளில் சகோதரியினுடைய பல பழைய மாணவிகள் அவரது யோசனைகளுடனும், உதவியுடனும், ஆதரவுடனும் சென்னையின் பல பகுதிகளில் புதிய பள்ளிகளை ஆரம்பித்துள்ளார்கள். அவைகளில் ஒன்றாகிய வித்யா மந்திர் நவீன உத்திகளைக் கையாண்டு குழந்தைகளுக்குப் பாடம் போதித்து வருகிறது என்பதால் பிரசித்தி அடைந்துள்ளது. அது இன்று முழு வளர்ச்சி பெற்று வருகிறது. இதுவும் தவிர, சகோதரி சென்ற பல வருஷங்களாகவே பெண்களுக்கு வேலை தேடித் தருவதில் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டு பலருக்கும் உதவி வருகிறார். நான் எப்போது போனாலும் சகோதரி சுப்புலக்ஷ்மியின் வீட்டில் ஏதோ ஓர் உதவியை நாடி வந்திருக்கும் யாரேனும் ஒருவரைச் சந்திக்கத் தவறியதில்லை. நான் முதல் முறையாக அவர் வீட்டுக்குச் சென்றிருந்தபோது எனக்குத் தட்டில் டிபன் — இனிப்பும், காரமும் — கொண்டு வந்து கொடுத்த அழகான சமையற்காரப் பெண் இப்போது அங்கில்லை. விசாரித்ததில் சென்ற ஓராண்டு காலமாகத் தினமும் இரண்டு மணி நேரம் சகோதரி அவளுக்குப் பாடம் கற்றுத்தந்ததாகவும், இப்போது அவள் வித்யாலயப் பயிற்சிப் பள்ளியில் உபாத்தியாயினியாக விளங்கப் பயிற்சி பெற்று வருவதாகவும் அறிந்தேன். இதை நான் எழுதும் போது எழுபத்தாறாவது பிறந்த நாளை நெருங்கிக் கொண்டிருந்த சுப்புலக்ஷ்மி உண்மையில் இன்னும் சுறுசுறுப்பாகவே இருந்தார். நான் எவ்வளவுதான் முயன்றாலும் அவருடைய சாதனைகள் அனைத்தையும் என்னால் கண்டு கொள்ளவே முடியாது. பொன் விழாக் கொண்டாட்டங்கள் நடந்த தினத்துக்கு மறுநாள் அவரை நான் காணச் சென்றபோது இதையே அவரிடம் எடுத்துக் கூறினேன்.

நான் அவர் அறைக்குள் சென்றபோது, அவர் மேஜை எதிரே அமர்ந்து தலை குனிந்து எழுதிக் கொண்டிருந்தார். சாரதா மாதர் சங்கத்தின் பொன் விழா நினைவு மலரை அனுப்ப வேண்டிய முகவரிகளை — உலகத்தின் பலவேறு பகுதிகளில் உள்ளவர்களின் ஜாபிதாவை — சேகரித்து எழுதிக் கொண்டிருந்

## திரிகடுகம்!



பால் எண்ணெய் காப்பிப் பொடியும் பருப்பு வகை
நாலும் விலையேறிப் போனதனால் - கோலஞ்செய்
துஞ்சி விழுமெந்தன் எசமானே! நீ எனக்குப்
பஞ்சப்படி அதிகம் தா.

ஆன வெளிநாட்டில் அதிகக் கடன் பட்டால்
வானம் வரை ஏறும் பொருள் விலைகள் - ஏனோ தான்
நல்லோர்கள் தீதெடுத்துக் கூறிடினும் கேட்க மனம்
இல்லாதிருத்தல் நம் அரசு.



ஆண்டாண்டு தோறும் அழுதுபடி பெற்றாலும்
மீண்டும் குறைந்திடுமோ பண்டவிலை - வேண்டா
இற்றை விலை நிலைத்து நின்றாலே போதும் நம்
குற்றுயிரை வாங்குவதற்கு.

— விசயன்

தார். அந்த நினைவு மலரில் புகழ் பெற்ற அறிஞர் பலர் — ஆடவரும் பெண்டிரும் — சமூகத் தொண்டின் பல லட்சியங்களைப் பற்றியும் துறைகளைப் பற்றியும், அவற்றுக்கான பயிற்சிகளைப் பற்றியும் கட்டுரைகள் எழுதியிருந்தனர்.

நான் ஜன்னலின் பக்கம் உட்கார்ந்திருந்தேன். சகோதரி கொஞ்ச நேரம் என்னுடன் பேசிக் கொண்டிருந்த பிறகு எனக்கு அந்த நினைவு மலர் ஒன்றைத் தந்தார். அதே சமயத்தில் என் கேசம் சின்னஞ் சிறு விரல்களால் பின்னாலிருந்து பற்றி இழுக்கப்படுவதை உணர்ந்தேன். திரும்பி நோக்கிய போது நான் எதிர்பார்த்தபடியே ஏழு வயது காயத்ரி ஜன்னலுக்கு வெளியே நின்று கொண்டிருந்தாள்.

"நாங்கள் இப்போது வேலையாக இருக்கிறோம் என்பது தெரியவில்லையா? எங்கள் வேலை முடிந்த பிறகு நீ வந்து விளையாடலாம்" என்று சகோதரி அவளிடம் கண்டிப்புடன் கூறினார்.

காயத்ரி கலைந்த கேசமும், மகிழ்ச்சி ததும்பும் முகமுமாக என்னைப் பார்த்து விஷமமாகச் சிரித்து விட்டுத் தன் தம்பியுடன் விளையாட ஓடி விட்டாள்.

நான் என் கையிலிருந்த நூற்று முப்பது பக்கங்கள் கொண்ட நினைவு மலரைப் புரட்ட ஆரம்பித்தேன்.

இந்தியாவில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பெண் கல்வி முன்னேற்றம் பற்றிய கட்டுரை ஒன்றில் நான் லயித்து விட்டேன். நாடு சுதந்திரம் அடைந்த பிறகு பதினைந்து ஆண்டுகளில் நாட்டில் உள்ள பள்ளிக்கூடங்கள் இரு மடங்காகப் பெருகி உள்ளன. 1965–66 ஆண்டுகளில் ஆறு வயதிலிருந்து பதினொரு வயதுக்குட்பட்ட குழந்தைகள் எல்லோரும் கட்டாயம் பள்ளிக்குச் செல்ல வேண்டும் என்பதுதான் குறிக்கோள் என்று கட்டுரையை எழுதியவர் குறிப்பிட்டிருந்தார். 1927ம் ஆண்டில் முதன் முதலில் பெண்கள் கல்வி குறித்து மகாநாடு நடத்திய காலத்துக்கும் இன்றைய நிலைக்கும் சம்பந்தமே இல்லை என்னும் அளவுக்குப் பெண்கள் உயர்நிலைப் பள்ளிகளும், கல்லூரிகளும் பெருவாரியாக அதிகரித்து விட்டன. எனினும் இருபது பெண்களில் ஒருத்திதான் உயர்நிலைப் பள்ளியில் படிக்கின்றாள். உயர்நிலைப் பள்ளிகளில் படிக்கும் பையன்களின் எண்ணிக்கை ஐந்தில் ஒன்றாகத்தான் இருக்கிறது. ஆயினும், சகோதரி சுப்புலக்ஷ்மி, மிஸ் லின்ச், மிஸ் பிரேசர், மற்றும் அவர்கள் தலைமுறையைச் சேர்ந்த பல பெண்கள் ஆரம்ப முயற்சியாக ஆர்வத்துடன் ஈடுபட்ட வேலை குறிப்பிடத் தக்க நல்ல பலனை அளித்து வருகிறது என்பதில் சந்தேகமென்ன?

இந்தியாவின் பல பகுதிகளிலும் ஆடவரும் பெண்டிரும் இவர்களைப் போலவே தன்னலமற்ற உற்சாகத்தோடு கல்விப் பணியில் இறங்கத் துணிவு பெற்றுள்ளனர். பாரத நாட்டில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் பொறுப்பு வாய்ந்த ஒரு பிரஜையாகத் திகழ்வதற்கு வேண்டிய கல்வி ஞானமும் மனவலிமையும் பெற இப்போதைய சூழ்நிலையைவிட இன்னும் நிறைய முன்னேற வேண்டியிருக்கிறது. ஆனால் அந்த நிலைமை விரைவில் வரும்...

சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வைத்ததுடன் நான் புத்தகத்தையும் மூடிவிட்டு எழுந்து நின்றேன்.

"நீங்கள் கிளம்பி விட்டீர்களா?" என்று சகோதரி கேட்டார்.

"ஆமாம். நான் போக வேண்டும்."

"அவசரப்பட்டுக் கொண்டு கிளம்ப வேண்டாம். இன்னும் சில விநாடிகளில் என் வேலை முடிந்து விடும்."

"இல்லை. நான் போக வேண்டும்" என்றேன். நான் வருங்காலத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேனல்லவா? அது ஏனோ எனக்குப் பிடித்தமாக இல்லை. என் உற்சாகத்தைக் குறைத்த எதிர் காலத்தை விட்டு ஓடிவிட விரும்பினேன். கடினமான ஆரம்ப முயற்சிகளைக் கொண்ட பழங்காலத்தைப் பற்றிச் சிந்திக்க ஆசைப்பட்டேன்.

சகோதரி எப்போதும் போல் இப்போதும் என்னை, அவர் சொல்லுக்குக் கீழ்ப்படிய வைத்து விட்டார். நான் மீண்டும் அமரும்படி ஆகிவிட்டது. ஜன்னலுக்கு வெளியே பார்த்தேன். காயத்ரி என்னை மறந்துவிட்டாள் போலும். அவளும் அவள் சகோதரனும் பந்து விளையாடுவதில் லயித்துப் போயிருந்தனர். வெளியே விளையாடிக் கொண்டிருக்கும் சிறு குழந்தை காயத்ரிக்கும் என் அண்மையில் ஒரு கஜ தூரத்தில் அமர்ந்து எதிர் காலத்தைப் பற்றி மும்முரமாகப் பேசிக் கொண்டிருக்கும் இந்த மூதாட்டிக்கும் உறவு காரணமாக முகச்சாயலில் ஒற்றுமை இருந்ததை நான் இதற்கு முன் பல தடவைகளில் கவனித்ததைப் போலவே இப்போதும் கவனித்தேன்.

வருங்காலம் அவர்கள் இருவர் கையிலுமே இருப்பதை நான் உணர்ந்தேன்.

காயத்ரிக்கும் வாழ்க்கையில் போராட்டங்கள் ஏற்படும். அவை சகோதரிக்கு ஏற்பட்டவற்றைப் போலன்றித் தன்மையால் வேறுபட்டிருக்கலாம்; வேறு வகையினவாய் இருக்கலாம். ஆனால் சகோதரி அனுபவித்தது போன்று இவளும் பல சிரமங்களை எதிர்த்து வெற்றிகொள்ள வேண்டியிருக்கும். அச் சமயம் வரும்போது சகோதரியைப் போலவே காயத்ரியும் அந்தப் போராட்டங்களை ரஸிப்பாள். சகோதரியைப் போலவே இவளும் வெற்றி பெற வேண்டிய அவசியத்தை உணர்ந்து, ஆர்வத்துடன், விட்டுக் கொடுக்காமல், நம்பிக்கையுடன் போராடுவாள்.






# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி. அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்.




COUPON

K.6

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

*Name* ..............................

*Address* ..............................

..............................

# வெற்றி எட்டக் கொட்டு முரசே!

**• ஜடாதரன் •**

மனைவிக்குப் பயப்படுகிற குடும்பங்கள் எல்லாமே சீக்கிரம் முன்னுக்கு வந்துவிடுவதாகப் புத்தகம் ஒன்றில் படித்தேன். 'மனோதத்துவப் புத்தகங்களில் என்னவெல்லாம் எழுதுகிறார்கள் இப்போது! உலகத்தில் முன்னுக்கு வரவேண்டும் என்று ஆசைப்படாத மனிதன் யார்?' என்று நான் எண்ணுகையிலேயே இடிமுழக்கம்போல் ஒருகுரல் கேட்டது.

''இப்படி விடாமல் வேளாவேளைக்கு ரேஷன் அரிசியைச் சாப்பிட்டு விட்டுச் சும்மா உட்கார்ந்திருந்தால் எப்படி? ஜெயகௌரி விஷயமாக என்ன செய்வதாக உத்தேசம்? பக்கத்து வீட்டு வரதராஜன், பின்புறத்துச் சுப்பிரமணியம் எல்லாரும் அவரவர் பெண்களுக்கு நடையாய் நடந்து அலைகிறார்கள். நீங்கள் கவலையில்லாமல் குத்துக்கல் மாதிரி...'' ஜெயகௌரி வேறு யாருமல்ல. என் மகள்தான்.

மங்களம் — அதுதான் என் மனைவி — இப்படிப் பொரிந்து தள்ளின பிறகு, ஜெயகௌரிக்காக அலையாமல் எப்படி இனியும் இருப்பேன்? சட்டையை மாட்டிக் கொண்டு பல மனிதர்களைப் பார்த்துவிட்டு வந்தேன். ஒன்றும் சரிப்பட்டு வரவில்லை.

காரியாலயத்தில் இரண்டு மாத லீவுக்கு மனுச் செய்தேன். புதிதாக வந்திருக்கும் அதிகாரி மனிதாபிமானம் மிகுந்தவர்.

''லீவு எப்படி ஐயா, போதும்? இன்னமும் ஒரு மாதம் போடுங்களேன். அதுதான் நிறைய 'கிரெடிட்' இருக்கிறதே!''

ரஜா வாங்கி வந்தவனை உற்சாகமாக வரவேற்று மறுபடியும் ஓர் அதட்டல் போட்டாள் மங்களம்.

''ஆமாம், பணத்துக்கு என்ன செய்தீங்க?''

''ஆஹாஹா, மோசம் போனேனே, வெறும் லீவை மாத்திரம் அதிகாரியிடம் வாங்கி வந்தேனே'' என்று நொந்து கொண்டேன். மறு நாள் காரியாலயத்துக்கு ஓடினேன். பிராவிடென்ட் சேமிப்பில் ஐந்நூறு ரூபாய் கடன் வாங்க மனுச் செய்தேன். அதிகாரி சிரித்தார்.

''லீவைத்தான் குறைத்துக் கொண்டீர். ஐந்நூறு ரூபாய் எப்படி ஐயா போதும்? ஆயிரம் ரூபாய்க்கு எழுதி வாரும்'' என்று அன்புடன் கடிந்து கொண்டார்.

ஆயிரம் ரூபாய்களும் இரண்டு மாத லீவும் இருக்கும்போது எதைத்தான் சாதிக்க முடியாது என்று இறுமாந்திருந்தேன். சென்னையில் ஓர் இடம் பாக்கியில்லை. வேப்பேரி, கீழ்ப்பாக்கம், மயிலாப்பூர், ராயபுரம், திருவான்மியூர், அடையாறு எல்லாம் அலைந்தாயிற்று. பெரிய பாரதமாகவே சொல்லலாம். நீங்கள் எப்படிப் பொறுமையாய்க் கேட்பீர்கள்? முடிந்து விடும் என்கிற சமயத்தில் காரியம் பூஜ்யமாகி விடும். மங்களமும் அதட்டியபடியே உற்சாகப்படுத்தி வந்தாள்.

கடைசியில் ஒரு நாள் ஜெயகௌரிக்கு விடிந்து விட்டது! செய்தியை அறிவிக்கச் சர்க்கார் பஸ்களில் ஏறித் துடிதுடிப்புடன் நிதானமாக வந்து சேர்ந்தேன்! மங்களம் பரபரப்புடன் வாசலில் காத்துக் கிடந்தாள். பக்கத்து வீட்டு வரதராஜன் அவர் மனைவி சந்திரா மாமி, இரண்டாவது போர்ஷன் ஹென்றி, கீழ்க்குடித்தனக்காரர் மாதவன் நாயர் எல்லாருமே ஆவலுடன் என்னை எதிர்கொண்டனர்.

''மாமா! என்ன ஆச்சு? காயா, பழமா?'' என்று கேட்டாள் சந்திரா மாமி.

''வெற்றி! வெற்றி! ஜெயகௌரிக்கு ஏற்பாடு பண்ணி விட்டேன்'' என்று கத்தினேன்.

வெறும் கத்தலா அது? வெற்றிக் கத்தல். மங்களத்துக்குப் பெருமை பிடிபடவில்லை. பழைய மாம்பலத்தின் கோடியில் புதிதாக ஆரம்பித்திருக்கும் பெண்கள் பள்ளிக்கூடத்தில் பரீட்சை வைத்தபின் ஜெயகௌரியை ஆறாவது வகுப்பில் சேர்த்துக் கொள்வதாகச் சொல்லி விட்டார்கள்! அந்த மகிழ்ச்சியை எப்படிக் கொண்டாடுவது என்றே எங்களுக்குப் புரியவில்லை. எல்லாருமாகச் சேர்ந்து ஆழ்ந்த பெருமூச்செறிந்தோம்.

நான் வசிப்பது பெரம்பூரில்!






# வழி பிறந்தது

வண்டி குலுங்கிக் கொண்டது. எதிரே வந்த நீளக்கும் பிளப்பு மோட்டார்கள் இரண்டும் பின்னால் இணைந்திருந்த காலி நீர்த் தொட்டி குலுங்க, செம்மண் புழுதியைக் கிளப்பிக் கொண்டு, ஊருக்குள் சென்று மறைந்தன.

வண்டிக்குள் சாய்ந்திருந்த ராமநாதன் நிமிர்ந்து அமர்ந்து கொண்டார்.

'வைத்தியக்காரர்கள். உ ல க த் தை யே தங்கள் கைக்குள் அடக்கி விட்டதாக நினைப்பு' என்று வாய் விட்டுக் கூறிச் சிரித்துக் கொண்டார்.

வண்டிக்காரனுக்கு அருகில் அமர்ந்திருந்த சாம்பு உள்ளே தலையைத் திருப்பி அதிசயத்தோடு ராமநாதனைப் பார்த்தார்.

'கழுத்துவரை ஏறிவிட்ட வெள்ளம் 'இரு இரு'வென்று உயர்ந்து கொண்டிருக்கும் நிலை: 'வழி பிறந்துவிடும்' என்ற நம்பிக்கையை இன்னும் இழக்காதிருக்கிறதே இந்தக் கிழம்!' என்று அவர் தமக்குள் வியந்து கொண்டார்.

வண்டி ஆலமர நிர்ந்நதியைக் கடந்து வலது பக்கம் திரும்பி முன்னேறியது.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு. பங்குனி உத்தரத்துக்கு முன் தினம் இரவு. காற்றும் மழையும் சக்கைப் போடு போட்டுக்கொண்டிருந்தன. கோவையிலிருந்து பழனிக்குப் புறப்பட்ட அந்த பஸ், மழைக்கும் காற்றுக்கும் ஈடு கொடுத்துக் கொண்டு கட்டை வண்டி வேகத்தில் முன்னேறி, அந்த ஆலமரத்தடியில் வந்து மூச்சை விட்டது.

ஒண்டிக்கட்டையான ராமநாதன், மறு நாள் பங்குனி உத்தரத்தன்று பழனியாண்டவனைத் தரிசிக்கும் எண்ணத்தில் அந்த பஸ்ஸில் புறப்பட்டு வந்திருந்தார். மாதம் இரு நூறுக்குக் குறையாது 'பென்ஷன்' வரும். ஏதாவது புண்ணிய ஸ்தலத்துக்குச் சென்று மீதிக் காலத்தைப் பயனுள்ளதாகக் கழிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் பழனியில் நிரந்தரமாகத் தங்கிவிடும் முடிவில் அவர் புறப்பட்டிருந்தார். ஆனால் இறைவனின் திருவுள்ளம் வேறு விதமாக இருந்தது.

கால அட்டவணைப்படி இரவு எட்டு மணிக்கெல்லாம் பழனியில் இருக்க வேண்டிய அந்த பஸ், மழைக்கும் காற்றுக்கும் ஈடு கொடுக்க முடியாது பழனிக்குப் பதினைந்து மைல் தூரத்தில் இருந்த சேவலூர் எல்லையில் அந்த ஆலமரத்தடியில் தீவிர சத்தியாக்கிரகத்தைத் தொடங்கிவிட்டது. பசி வயிற்றைக் கிள்ள, ராமநாதன் கைப்பையை எடுத்துக் கொண்டு ஊருக்குள் வந்தார்.

மழை விட்டிருந்தாலும் 'சிலுசிலு'வென்று பன்னீர் தெளித்தபடி வானம் இருந்து கொண்டுதானிருந்தது. ஊர் ஒரேயடியாகக் கும்மிருட்டில் மூழ்கிக் கிடந்தது. தெருவெல்லாம் முழங்கால் அளவுக்கு மழைத் தண்ணீர்.

'டார்ச்' விளக்கின் உதவி கொண்டு எங்கேயாவது ஹோட்டல் இருக்குமா என்று தேடியலைந்தார் ராமநாதன். இருந்த ஒரே ஹோட்டலில் ஒன்பது மணிக்கெல்லாம் மூடிவிட்டார்கள் என்று தெரிந்தது. வேறு வழியின்றி ஒரு பெட்டிக் கடையைத் தேடிப் பிடித்து,

அரை டஜன் மலைப் பழத்தை வாங்கிக் கொண்டு ஒரு வீட்டுத் திண்ணையில் ஏறி அமர்ந்து கொண்டார்.

எங்கேயோ போகும் எண்ணத்தோடு வீட்டுக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்த ஒருவர், திண்ணையில் ராமநாதனைக் கண்டதும், தயங்கியபடியே அவர் அருகில் வந்தார்.

''எனக்கு ஓர் உதவி செய்வீர்களா?''

அவருடைய தோற்றமும், நின்றிருந்த கோலமும், தயங்கியபடி கேட்ட நிலையும் ராமநாதனுக்கு ஏதோ ஒரு முடிவைக் கொடுத்தன. ராமநாதன் இரண்டு பழங்களை எடுத்து நீட்டினார்.

தீயை மிதித்தவர் போல் அவர் பின்வாங்கினார்.

''இல்லை, இல்லை. என்னுடைய பசிக்காக நான் உங்களை யாசிக்கவில்லை. இங்கே அருகில் வள்ளிமலையில் யாருமற்ற அநாதையாக ஆனால் வரப்பிரசாதியாக ஒரு வேலன் இருக்கிறான். அவனுடைய பசியைத் தீர்க்க உதவி செய்யும்படி தான் உங்களை யாசிக்கிறேன்'' என்று வேதனை நிறைந்த குரலில் கேட்டார் அவர்.

உண்மையாகவே ராமநாதனுக்கு அவர் கூறியது ஒன்றும் புரியவில்லை. அதை உணர்ந்துகொண்டு விளக்கினார் அந்தப் புதியவர்.

''வள்ளிமலை முருகன் கோவில் குருக்கள் நான். இறைவனுக்கு இன்னும் சாயங்கால பூஜையும், நைவேத்தியமும் ஆகவில்லை. அதை முடிக்கத்தான் புறப்பட்டுக்கொண்டிருக்கிறேன்.''

ராமநாதன் புயலாகச் சீறினார்.

''இதைக் கூற உங்களுக்கு வெட்கமாக இல்லை? இரவு பத்து மணியாகப் போகிறது. இன்னும் சாயங்கால பூஜை செய்யவில்லை என்று கூறுகிறீர்களே! மழையாக இருக்கிறது என்று வீட்டிலேயே இருந்து விட்டீர்களா? நீங்கள் சாப்பிடவில்லை? உங்களையெல்லாம் சொல்லிக் குற்றமில்லை. கேட்க ஆளில்லாது போய்விட்டது. காலம் கலிகாலம்.''

புதியவர் வறண்ட சிரிப்புச் சிரித்தார்.

''நீங்கள் கூறுவதெல்லாம் உண்மைதான். ஊர்க் கோவிலில் பூஜை நடந்த பிறகுதான் ஊரார் கையை நனைப்பார்கள். அது அந்தக் காலம். இங்கே குடிகொண்டிருக்கும் முருகன், தன் அன்றாடத் தேவைக்கே ஆரம்பப் பள்ளி ஆசிரியனான என் வருவாயை நம்பிக்கொண்டிருக்கிறான். என்னை அவன் கவனிக்கிறானோ இல்லையோ, அவனை நான் தான் கவனித்தாக வேண்டியிருக்கிறது. எனக்கு மூன்று மாதமாக இன்னும் சம்பளம் தரவில்லை. பக்கத்து வீட்டுக்காரனிடம் கெஞ்சிக் கூத்தாடி அரை ஆழாக்கு அரிசி கடனாக வாங்கிச் சமைத்துக் கொண்டு வந்திருக்கிறேன். நானும் காலையில் சாப்பிட்டதுதான். இதை முருகனுக்குக் காட்டி விட்டு நான் சாப்பிட்டாக வேண்டும். இந்த வரைக்கும் முருகன் தனக்குப் படைக்கும் சாதத்தைக் கைநீட்டி வாங்கிக் கொள்ளாது இருக்கிறானே, அது என் வயிறு செய்த பாக்கியம். எல்லாம் இல்லாக் கொடுமை தான்'' என்றார் அவர்.

அவர் கொண்டு வந்திருந்த தூக்குக்கூடையில் துணியால் வாய் கட்டிய வெண்கலப் பானையும், சிறு கண்ணாடிக் குப்பியில் எண்ணெய்த் திரியும், இலை மடக்கிய உதிரிப் பூவும் இருந்ததை அப்போதுதான் ராமநாதன் கவனித்தார்.

''நான் உங்களுக்கு என்ன உதவி செய்ய வேண்டும்?'' என்று கேட்டார் ராமநாதன். அவருடைய குரல் இறங்கிப் போயிருந்தது.

''ஒன்றும் பெரிய உதவியில்லை. மலைக்குப் போகும் வழியில் படியெல்லாம் ஒரே முள் புதராக மண்டிக் கிடக்கும். பூச்சி பொட்டுக் கூட நடமாடும். உங்களுடைய 'டார்ச்' விளக்கை அரை மணி நேரத்துக்கு இரவல் தர முடியுமா?





## கல்யாண வீட்டில்..

### (சிங்காரத்தின் லைகங்கள்)

1. சங்கிலியின் குரலும் பார்வையும் அவன் நேர்மையாக வாழ விரும்புகிறான் என்பதைச் சொல்லின. விளக்கு அணைந்ததும் திருட்டு நடந்திருக்க வேண்டும். முந்திரிக் கொட்டை போல் பிடில் வித்துவான் 'ஜன்னல் வழியே ஒருவன் வெளியே குதித்து ஓடியதைத் தாம் பார்த்ததாக'க் கூறினார். அத்தனை இருட்டில் அவருக்கு மட்டும் அந்த மனிதனின் செய்கை தெரிவானேன்? ஆகவே, அது கற்பனை என்று ஊகிக்கிறான் சிங்காரம். விளக்கணைந்த பரபரப்பில் எல்லாரும் ஸ்தம்பித்துப் போக அவர் மட்டும் தொடர்ந்து பிடில் வாசித்தார். ஏன்? தம்மைப் பிறர் சந்தேகப்படக் கூடாது என்ற தற்காப்பு எண்ணம். அது வருவானேன்? குற்றம் புரிந்தவருக்கே ஏற்படும் அந்தக் குறுகுறுப்பு.

2. சிறந்த விருந்தைப் புறக்கணித்து விட்டுப் புறப்பட்ட அவர் செயல். தவிர பிடில் பெட்டியைச் சீடனிடம் தராமல் தாமே தூக்கிக் கொண்டு சென்றது சிங்காரத்தின் சந்தேகத்துக்கு வலுவூட்டுகிறது. ஆகவே துணிந்து செயல்பட்டதும் திருட்டு வெளிப்படுகிறது.



நீங்கள். 'நான் வராவிட்டால் என்ன செய்வீர்கள்?' என்று கேட்கலாம். முருகன் மேல் பாரத்தைப் போட்டுவிட்டுக் கிளம்பி விடுவேன். அந்தவரை முருகன் எனக்குத் துணிச்சலைக் கொடுத்திருக்கிறான். புறப்படும் போது திண்ணையில் உங்களைக் கண்டேன். என்னவோ கேட்க வேண்டும் என்று தோன்றியது. கேட்டேன்.''

கையிலே உரிக்க எடுத்த வாழைப் பழத்தை அப்படியே பையில் வைத்துக் கொண்டு, ''கிளம்புங்கள், நானும் வருகிறேன்'' என்று எழுந்தார் ராமநாதன்.

''அவசரமில்லை சார். நீங்கள் பழத்தைச் சாப்பிட்டுவிட்டுக் கிளம்புங்கள், போதும்'' என்று புதியவர் எவ்வளவோ கேட்டுக் கொண்டும், ராமநாதன் பிடிவாதமாக, உடனே கிளம்பி விட்டார்.

பெயருக்குத்தான் அது வள்ளி மலையாக இருந்ததே தவிர, உண்மையில் இருநூறு படிகளை நிறைந்த சிறு குன்றமாகத்தான் இருந்தது அது. படியே தெரியாது முள்ளும் செடியும் புதராக மண்டிக் கிடந்தன. மழை பெய்த சகதியும் சேர்ந்துகொண்டு படியில் கால் வைத்து ஏறத் தனித் திறமையைக் கொண்டு வரும்படி இருந்தது.

இரண்டொரு இடங்களில் நல்ல பாம்பும், நட்டுவாக்கிலியும் சரசரவென்று மறைந்து சென்றன.

''என்ன அநியாயம்! கோவிலை இப்படியா விட்டு வைப்பார்கள்? இதைக் கவனிக்க இந்த ஊரில் யாருமே இல்லையா?'' என்று மனம் நொந்து கேட்டார் ராமநாதன்.

''நீங்கள் நகரத்துவாசிபோல் இருக்கிறது. அங்கெல்லாம் ஆலயங்களுக்கு நல்ல வரும்படி உண்டு. கிராமங்களில் இருக்கும் கோவில்களெல்லாம் கவனிப்பாரின்றி இந்த முருகன் கோவிலைப் போலத்தான் இருக்கின்றன'' என்றார் சாம்பு. அவர்தான் ராமநாதனைக் கோவிலுக்கு அழைத்து வந்தவர்.

படியேறி இருவரும் கோவிலுக்குள் வந்தனர். நீண்டு அகன்ற பிராகாரம் புதர் மண்டிக் கிடந்தது. சாம்பு உள்ளே சென்று விளக்கேற்றினார். ''சார், உங்கள் பெயருக்கே ஓர் அர்ச்சனை செய்யட்டுமா?''

''என் பெயருக்கு வேண்டாம். முருகன் பெயருக்கே செய்யுங்கள்'' என்று பையிலிருந்த பழத்தை எடுத்துக் கொடுத்தார் ராமநாதன். நிதானமாக, அரை மணிக்கும் அதிகமாக அர்ச்சனை செய்தார், சாம்பு. கற்பூர ஆரத்தியின்போது முருகனின் திரு உருவம் பளிச்சென்று தெரிந்தது. வலது கரத்தில் தண்டமும், இடுப்பிலே ஊன்றிய இடது கரமுமாக, கௌபீனதாரியாய்த் தண்டாயுதபாணியாகப் புன்சிரிப்புச் சிரித்துக்கொண்டிருந்தான் வேலவன்.

அப்படியே பிராகாரத்தில் உட்கார்ந்து கொண்டு பழத்தை உரித்தார் ராமநாதன்.

''நாளைக்குப் பங்குனி உத்தரமாயிற்றே. சுவாமிக்கு ஏதாவது விசேஷ அபிஷேகம் உண்டா?''

''சரிதான்! நித்தியப்படிக்கே இங்கே வழியைக் காணோம். அபிஷேகத்துக்கு எங்கே போவது?'' என்றார் சாம்பு.

''ஏன், விசேஷ நாட்களில் கூடவா ஊர்க்காரர்கள் உதவ மாட்டார்கள்?'' என்று அதிசயத்தோடு கேட்டார் ராமநாதன்.

''நன்றாகக் கேட்டீர்கள். தாய் தெருவிலே பிச்சை எடுக்க, மகன் மகாமகத்தில் அன்னதானம் செய்கிறான் என்று பழமொழி உண்டே, தெரியுமா? அதைப் போல் ஊர்க்காரர்களில் பாதிப்பேர் பால் காவடி எடுத்துக்கொண்டு பிற்பகலிலேயே பழனிக்குக் கிளம்பிப் போய்விட்டார்கள். உள்ளூரில் இருக்கும் முருகன் சோற்றுக்கே தாளம் போடுகிறான். வேடிக்கையாக இல்லை?''

ராமநாதனுக்குச் சட்டென்று ஏதோ ஒன்று அறிவைத் தாக்கியது. பழனியிலேயே நிரந்தரமாகத் தங்கிவிடக் கிளம்பியவர், அந்தக் கடைசிப் பஸ்ஸில் கிளம்புவானேன்? மழைக்கும் காற்றுக்கும் ஈடு கொடுத்துக் கொண்டு வந்த அந்த பஸ் அந்த ஊர்வரையில் வந்து உயிரை விடுவானேன்? ஊருக்குள் வந்தவர் குறிப்பாகச் சாம்புவின் வீட்டுத்



மிகக் குளுமைக்கு

சிறந்த ஸ்டைலுக்கு



G.E.C. எவரெஸ்ட்

ஜி.இ.ஸி எவரெஸ்டின் ஸ்டைல் சரியானது. ஜி.இ.ஸியின் சிறந்த ஃபான் இயந்திரசாஸ்திரத்தின் தயாரிப்பான எவரெஸ்ட் உங்களை மிகக் கடின வெயிலிலும் குளுமையாகவும் எப்பொழுதும் ஸ்டைலில் இருக்கவும் ஏற்ப திட்டமிட்டுச் செய்தது.




G.E.C.

உங்கள்
உத்திரவாதம்

GEC/G/130

திண்ணைக்கு வந்து உட்காருவானேன்? வள்ளிமலை முருகன் தன்னுடைய அவல நிலையை அவரிடம் கூறுவதற்காகவே இவ்வளவும் செய்திருக்கிறானோ? அப்படியானால் அவரை அங்கேயே தங்க வைத்து அருள் வெள்ளத்தில் ஆழ்த்த வேண்டும் என்பதுதான் முருகனின் திருவுள்ளமோ?

தம்முடைய முடிவை ராமநாதன் சாம்புவிடம் கூறியபோது அந்த ஏழைக் குருக்கள் திகைத்துப் போனார். ராமநாதன் பர்சிலிருந்து பத்து ரூபாய் நோட்டு ஒன்றை உருவிக் கொடுத்து மறுநாள் அபிஷேகத்துக்குத் தேவையானவற்றை வாங்கிக் கொள்ளுமாறு கூறியதும், உண்மையில் சாம்பு அடைந்த ஆனந்தத்தை மறுநாள் பாலாபிஷேகத்தில் திளைத்த அந்த வள்ளிமலை முருகன்கூட அனுபவித்திருப்பானா என்பது சந்தேகம்தான்.

மறுநாள் காலையில் வெளிச்சத்தில் கவனித்தபோதுதான் கோவிலின் பழம் பெருமையும், தற்போதைய அவல நிலையும் அதிகமாகத் தெரிந்தன ராமநாதனுக்கு.

வலது பக்கத்துப் பிராகாரம் முழுவதும் ஒரே கல்வெட்டுக்கள் மயம். அர்த்த மண்டபத்துத் தூண்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிற்பக் கருவூலமாக இருந்தது. யாளி வாயில் உருண்ட கல் பந்தும், சரம் சரமாகத் தொங்கிய கல் தோரணங்களும் ராமநாதனுக்குப் பிரமிப்பையூட்டின. தமக்குத் தெரிந்த சொற்ப ஆராய்ச்சி அறிவைக் கொண்டு கல்வெட்டுக்களைப் படித்துப் பார்த்தபோது அவர் மலைத்துப் போனார்.

ஆலயத்தில் குடிகொண்டிருந்த முருகன் ஒரு காலத்தில் ஐந்நூறு வேலி நிலத்துக்கு அதிகாரியாக இருந்து, பாலாலும், தேனாலும் நித்தியப்படி அபிஷேகம் நடத்திக் கொண்டு தைப்பூசத்தன்று தெப்பத்தில் பவனி வந்ததாக, அது கல்மேல் எழுத்தாகக் கூறியது! ஐந்நூறு வேலி நிலமும் என்னவாயிற்றோ? அந்த முருகன்தான் அறிவான். தெப்ப உற்சவம் நடந்திருக்க வேண்டும் என்பதற்கு அடையாளமாக மலையடிவாரத்தில் அலை வீசும் பரந்த திருக்குளமும், நீராழி மண்டபமும் மட்டும் மிஞ்சியிருந்தன.

ராமநாதன் சாம்புவின் வீட்டிலேயே ஒரு பகுதியை வாடகைக்கு எடுத்துக் கொண்டு சேவலூரில் தங்கி, தம் முழுக் கவனத்தையும் வள்ளிமலை முருகனிடம் திருப்பினார்.

'பிராவிடெண்ட்' பணமாக வந்திருந்த ஐயாயிரம் ரூபாயையும் நம்பிக் கொண்டு உடனேயே தம்முடைய திருப்பணியைத் தொடங்கினார். படிக்கட்டையும் பிராகாரத்தையும் செப்பனிட்டார். மலைமேல், ராஜகோபுரத்தில் இருந்த இடிபாடுகளைச் சரி செய்து, கோபுர உச்சியில் இரவைப் பகலாக்கும் பாதரச விளக்கைப் போட்டு, எந்த நேரத்திலும் தைரியமாக மலையேறி வந்து முருகனைத் தரிசிக்க ஏற்பாடு செய்து கொடுத்தார்.

மலையடிவாரத்தில் சிறு சிறு கடைகளைக் கட்டிக் கொடுத்து, கோவிலுக்கு நிரந்தர வருமானத்துக்கு வழி செய்து கொடுத்தார். கோவிலில் சிறிது சிறிதாகக் கலகலப்புத் தட்டத் தொடங்கியது. ஆறே மாதங்களில் ராமநாதன் வருகையால் வள்ளிமலை முருகனுக்கு நல்ல விளம்பரம் பிடித்தது. பக்த கோடிகளும் அதிகரித்து விட்டனர். அதே சமயத்தில் அவரை அறியாது ராமநாதனும் தமக்கு நல்ல விளம்பரத்தைத் தேடிக் கொண்டுவிட்டார்.

அந்த நிலையில்தான் அந்த எதிர்பாராத நிகழ்ச்சி நடைபெற்றது. ஊரிலிருந்த ஆரம்பப் பள்ளியின் கூரை, பலத்த காற்றுக்கு இரையாகித் தரையோடு சேர்ந்து விட்டது. முருகனுக்கு வழி செய்தது போல் அவர்தான் பள்ளிக்கும் ஏதாவது வகை செய்ய வேண்டும் என்று ஊரார் விரும்பினர். அவர் மறுக்கவில்லை. ஆனால் அவரிடம் பைசாக் கூட இல்லை. 'பிராவிடெண்ட் பண்ட்' பணம் ஐயாயிரமும் முருகனுக்கே செலவாயிற்று.

அதனால் அந்த ஊர் முனிசிபல் அங்கத்தினராக இருந்த சபாபதியைச் சந்தித்துப் பேசினார் ராமநாதன். சபாபதி ராமநாதனை வேறு விதமாக எடை போட்டிருந்தார்.

முனிசிபல் அங்கத்தினர் பதவி சபாபதியின் பரம்பரைச் சொத்து. அந்த ஊரில் பரம்பரையாகச் செல்வ நிலையில் இருந்து வரும் குடும்பம் அவருடையது. வெளியூரைச் சேர்ந்த ராமநாதன் திடீரென்று வந்து, கோவில் திருப்பணியில் ஈடுபட்டது, அதிலும் தம்மை ஒரு வார்த்தைகூட மதித்துக் கேட்டுக் கொண்டு செய்யாதது, சபாபதிக்கு மிகுந்த எரிச்சலைக் கொடுத்தது.

"உள்ளூரில் மதிப்பில்லாத பேர்வழிகள்தான் வெளியூருக்கு வந்து, அந்தத் திருப்பணி இந்தத் திருப்பணி என்று வலியத் தலையிட்டு விளம்பரம் தேடிக் கொண்டாக வேண்டும். அந்தப் பரிதாப நிலை எனக்கு இல்லை" என்று கூறி ராமநாதனை அனுப்பி விட்டார்.

வேறு வழியின்றி ராமநாதன் அரசாங்கத்துக்கு நேரடியாக விண்ணப்பம் செய்துகொண்டார். அவர் எடுத்துக் கொண்ட முயற்சியின் பயனாக, சபாபதி என்னவோ முட்டுக்கட்டை போட்டும், பள்ளிக் கட்டடம் பழுது பார்க்கப்பட்டுவிட்டது.

உடனேயே நகரசபைத் தேர்தலும் வந்தது. ராமநாதனுக்குப் பொதுப் பணியில் இருந்த ஈடுபாட்டைக் கண்கூடாகக் கண்டு விட்ட ஊரார், அவரைக் கட்டாயப்படுத்தி, பரம்

## யாரோ? அவர் யாரோ?

ஜெர்மன் நாட்டுப் பேரறிஞர் ஒருவர் வயதான காலத்தில் ஒரு நாள் தாம் எழுதி முடிக்க வேண்டிய நூலைப் பற்றியே எண்ணிக் கொண்டு வீட்டுக்கு வந்தார். கதவு பூட்டி யிருந்தது.



திறவுகோல் தம்மிடம் இல்லை என்று அறிந்தார். கதவைத் தட்டினார். வேலைக்காரி மாடி ஜன்னலில் தலையை நீட்டிக் கொண்டு யாரோ அந்நியர் கூப்பிடுகிறார் என்று எண்ணி, "ஆசிரியர் வீட்டில் இல்லை" என்று கூறினாள். "அப்படியா, சரி, நான் இன்னொரு தடவை வருவதாக அவரிடம் சொல்லு!" என்று கூறிக் கொண்டு வெளியே சென்றார்.

தகவல்: வெ. முத்துக்குமரன்

பரைப் பதவிக்காரரான சபாபதிக்கு எதிராகப் போட்டியிடும்படியான நிலையை உண்டாக்கினர். ராமநாதன் சபாபதியைச் சாதாரணமாகக் கூடத் தோல்வியுறச் செய்யவில்லை. கட்டிய முன்பணம்கூடத் திரும்பக் கிடைக்காத நிலைக்கு ஆளாக்கி வெற்றி கண்டார். அதோடு சபாபதியின் தீராத பகைக்கும் ஆளானார்.

இந்த நிலையில்தான் ராமநாதன் வள்ளி மலை முருகனுக்குத் தெப்பம் கட்டி உற்சவம் கொண்டாடத் தீர்மானம் செய்தார். அதற்கு நன்கொடையும் வசூலித்தார்.

பாலுக்கு ஆசைப்பட்டவனின் கழுக்கே மோசம் வந்த கதையாக, ராமநாதன் தெப்பத்துக்குக் கனவு காண, குளத்துக்கே ஆபத்து வந்தது! சுத்தம் சுத்தம் என்று எதிலுமே சுத்தத்தை வலியுறுத்தி வந்த ராமநாதன், கோவிலில் அக்கறை காட்டத் தொடங்கியதிலிருந்து மாதம் தவறாது, குளத்தைச் சுத்தம் செய்து பாசி எடுக்க ஏற்பாடு செய்திருந்தார். அப்படியிருந்தும், எப்படித்தான் அந்தத் துர்நாற்றம் குளத்திலிருந்து வீசியதோ! ராமநாதன் நடுங்கிப் போய் விட்டார். தெப்பத்துக்காகச் சேர்த்திருந்த நன்கொடையை அப்படியே செலவு செய்து, குளத்தைத் தலைகீழாகப் புரட்டுவது போல் தூர் எடுத்துப் பார்த்தார். ஒரு வாரம் வரை நாற்றம் அடங்கியிருந்தது. பத்து நாட்களுக்குப் பிறகு மீண்டும் அது கிளம்பி விட்டது! அதோடு கொசு உபத்திரவமும் சேர்ந்து ஊரையே அழுக வைத்தது!

குளத்து நீரை இறைக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற தீர்மானத்தை நகர சபைக் கட்டடத்தில் கொண்டு வந்தார் ராமநாதன். அந்தத் தீர்மானம் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட போது, ''குளத்தில் இப்பொழுது இருக்கும் நீர் எந்த யுகத்துத் தண்ணீரோ? அழுகி நாற்றமெடுக்கிறது. நீரை முழுக்க இறைத்து, அடியில் இருக்கும் ஊற்றுக் கண்களை அடைத்து, ஒரு வாரம் பத்து நாட்கள் போல் காற்றும் வெளிச்சமும் படும்படி வைத்தால் எவ்வித துர்நாற்றமும் போய் விடும். வேண்டிய போது ஊற்றுக் கண்களைத் திறந்துவிட்டால் இரண்டு நாட்களில் குளம் நிரம்பி விடும். எனவே, இப்போதிருக்கும் நீரை முழுதும் வெளியேற்ற நகரசபையார் உதவினால், தெய்வ காரியத்தைச் செய்தது போலவும் ஆகும், ஊருக்கு நன்மையைச் செய்தது போலவுமாகும்'' என்றார் ராமநாதன்.

நகரசபையின் மற்ற அங்கத்தினர்கள் சபாபதிக்கு வேண்டியவர்கள். எனவே, ராமநாதனுக்கு எதிர்ப்பு தெரிவிக்கலாயினர்.

''குளத்தினடியில் ஊற்று இருக்கிறது என்பதை நாங்கள் நம்பத் தயாராக இல்லை. குளத்தைவிட ஊர் சுகாதாரமே எங்களுக்கு முக்கியம். எனவே, குளத்தைத் தூர்த்துவிட முடிவு செய்திருக்கிறோம்.''

''முருகனுக்கு அபிஷேகத் தீர்த்தமெடுக்கும் திருக்குளத்தையா தூர்ப்பது? அழகான படிக்கட்டும், அலை வீசுகிற நீர்ப் பரப்பும் இனி கொஞ்சும் அந்த அழகான நீராழி மண்டபத்தையும் தூர்ப்பது ஒன்றுதான், துர்நாற்றத்தை அகற்ற உங்களுக்குத் தோன்றியிருக்கும் ஒரே வழியா? வீணாகத் தெய்வ குற்றத்துக்கு ஆளாகி விடாதீர்கள்'' என்று கெஞ்சினார் ராமநாதன்.

''அபிஷேக தீர்த்தத்துக்கு வேண்டுமானால் ஒரு கிணறு வெட்டித் தர ஏற்பாடு செய்கிறோம்.''

''ஊருக்கு உபகாரியாக இருக்கும் குளத்தைத் தூர்த்துவிட்டுக் கிணறு வெட்டித் தருகிறேன் என்று கூறுகிறீர்களே. அதற்கு ஆகும் பணத்தில் குளத்தைச் சுத்தம் செய்து விடலாமே ?''

''அது பெரும்பான்மையோரின் முடிவைப் பொறுத்தது.''

''குளத்தைத் தூர்க்க நான் ஒருகாலும் ஒப்ப மாட்டேன்.''

'முடிவு செய்ய வேண்டியது முனிசிபல் கௌன்சில். இது உங்கள் வீட்டு விஷயமல்ல. ஊர் சுகாதாரத்தையே பாதிக்கும் பொதுவான காரியம்'' என்று ராமநாதனைக் கேலி செய்த ஓர் அங்கத்தினர், ''குளத்தை உடனடியாகத் தூர்க்க வேண்டும்'' என்று அந்தக் கூட்டத்திலேயே ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். ராமநாதனின் எதிரிலேயே அது வோட்டுக்கு விடப்பட்டது. எதிர்த்து வோட்டளித்தவர் ராமநாதன் ஒருவர்தான் !

'நியாயத்துக்குத் துணை நிற்க இந்தக் கூட்டத்தில் ஒரு தர்மவான்கூடவா இல்லை!' என்று கண்ணீர் சொரிந்த ராமநாதன், உணர்ச்சிவசப்பட்டுக் கரம் கூப்பி, ''முருகா! கணவன் மேல் உள்ள கோபத்தைக் குழந்தையிடம் காட்டும் மனைவியைப் போல், என்னை வஞ்சம் தீர்ப்பதாக எண்ணிக் கொண்டு உன்னுடைய உடைமைகளை அழிக்க முன் வந்து விட்டார்கள். இது எனக்கு ஏற்பட்ட தோல்வியல்ல. நீ இருக்கிறாயா, இல்லையா என்பதைத் தங்களையறியாது இவர்கள் உரைத்துப் பார்க்க முயன்று விட்டார்கள். உனக்குச் சக்தியிருந்தால் உன்னுடைய திருக்குளத்தைக் காத்துக் கொள்'' என்று ஆவேசம் வந்தவர் போல் கூறி எழுந்தார்.

என்னதான் சபாபதியின் உற்ற நண்பராக இருந்தாலும், முனிசிபல் சேர்மன் தெய்வ நம்பிக்கை உடையவர். ராமநாதன் அப்படிப் பகிரங்கமாகத் தெய்வத்தை அறைகூவி முறையிட்டது, அவருக்கு ஏதோ கலக்கத்தைக் கொடுத்தது.

ராமநாதனை அழைத்து, ''தீர்மானத்தை இன்னும் பத்து நாட்களுக்குப் பிறகு செயலாக்கலாம் என்று ஒரு திருத்தம் கொண்டு வருகிறேன். அதற்குள் நீங்களே முயற்சி செய்து குளத்தைச் சுத்தம் செய்யப் பாருங்கள். பத்து நாட்களுக்குப் பிறகும் குளம் இதே நிலையில் இருந்தால் தீர்மானத்தைச் செயலாக்கி விடுவோம்'' என்றார்.

ராமநாதனுக்கு ஒரே மகிழ்ச்சி! கடலில் மூழ்கித் தவித்துக் கொண்டிருப்பவனுக்குத் துரும்பு கிடைத்தது போல் ஆனந்தத்துடன், சேர்மனின் யோசனைக்கு ஒப்புக் கொண்டார்.

அன்றிலிருந்து, அந்த விநாடியிலிருந்து ராமநாதன் ஓர் இடத்தில் நிற்கவில்லை. இரவென்றும், பகலென்றும் பாராது, ஊண் உறக்கமின்றித் திருக்குளத்தைக் காக்க நன்கொடைக்காகப் பிசாசு போல் வெறி

அதிகரித்த வெப்பத்தால்
ஏற்படும் விரிசல், பிளவு, அரிப்பு
முதலியவைகளை எதிர்த்து நிற்கும்

# ஏஸிஸி
# ஹை அலுமினா ஃபயர்பிரிக்குகள்

**உங்கள் பிரத்தியேகத் தேவைக்கேற்ப தயாரிக்கப்படுகின்றன!**





எங்கள் ஃபயர்பிரிக்குகளை உங்கள் பிரத்தியேகத் தேவைக்கேற்றபடி தயாரித்துத் தருகிறோம். உங்களுடைய பிரத்தியேகத் தேவை என்ன என்பதை எங்களுக்குத் தெரிவியுங்கள். மீடியம், ஹை மற்றும் ஸுபர் அளவில் அலுமினா உள்ள ஏஸிஸி ஃபயர்பிரிக்குகள் கிடைக்கின்றன. மிகவும் அதிகரித்த வெப்பத்தில், கடினமான சூழ்நிலையில், நீடித்து உழைப்பதற்கேற்ற உரம் பெற்றவை இந்த ஹை அலுமினா ஃபயர்பிரிக்குகள்.

இதர விவரங்களுக்கு
எழுதுங்கள்:
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங்
கம்பெனி ஆஃப் இந்தியா
லிமிடெட்
பம்பாய் . அஹமதாபாத்
பெங்களூர் . கல்கத்தா
கோயம்பத்தூர் . புது டில்லி
இந்தூர் . கான்பூர் . மதராஸ்
பாட்னா . ஹைதராபாத்




**தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்**
**தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்**

யுடன் அலைந்தார். இரண்டொரு இடங்களில் கடனுக்குக்கூட முயற்சி செய்து பார்த்தார். எதுவும் பலிக்கவில்லை.

நகரசபையார் வைத்திருந்த கெடு முடிந்துவிட்டது. கடைசி இரண்டு நாட்களில் ராமநாதனுக்கு எங்கிருந்தோ அலாதியான தெம்பும், நம்பிக்கையும் பிறந்துவிட்டன! என்ன காரணம் என்பது அவருக்கே புரியவில்லை.

''கெடு இன்றோடு முடிகிறதே. இன்னும் ஒரு வழியும் பிறக்கவில்லையே?'' என்று சாம்பு கூடக் கேட்டு விட்டார்.

''நான் எதற்காகக் கவலைப்படுவது? கெடு வைக்க இவர்கள் யார்? குளத்தைக் காத்துக் கொள்ள முருகனுக்குத் தெரியாதா என்ன? வீணாக நாம் எதற்காகக் கவலைப்பட வேண்டும்?'' என்றார் ராமநாதன்.

அன்று மாலை ராமநாதனுக்குத் திடீரென்று குளிர் காய்ச்சல் வந்து விட்டது. மாட்டு வண்டி வைத்துக் கொண்டு அவருடன் அடுத்த ஊரிலிருந்த வைத்தியர் வீட்டுக்குப் புறப்பட்டார் சாம்பு. வண்டி ஊர் எல்லையைக் கடக்கும் போது, குளத்து நீரை இறைத்து வெளியேற்ற இரண்டு தீயணைக்கும் மோட்டாரும், தூர்த்துவிட மண் வாரி வண்டியும், அவர்களைத் தாண்டிக் கொண்டு ஊருக்குள் சென்றன. ராமநாதன் தமக்குள் சிரித்துக் கொண்டார்.

மருந்து வாங்கிக் கொண்டு ராமநாதனோடு வைத்தியர் வீட்டிலிருந்து இறங்கிய சாம்பு திடுக்கிட்டுப் போனார். மத்தாப்புக் கொளுத்திய மாதிரி வானத்தில் ஒரேயடியாக வெளிச்சமும் புகையும் தெரிந்தன.

வழியோடு தலைதெறிக்க ஓடி வந்து கொண்டிருந்த ஒருவனை நிறுத்தி, சந்தேகத்தோடு விசாரித்தார் சாம்பு.

''ஆமாங்க. ஊருக்கு வெளியே முகாம் போட்டிருக்கிற சர்க்கஸ் கூடாரம்தான் தீப் பற்றி எரிந்து கொண்டிருக்கிறது. தீப்பந்தாட்டம் ஆடுகிறவனின் குறி தவறிப் போய்க் கூடாரச் சீலையில் பட்டு விட்டதாம். இன்றைக்கு அவங்களோட நாலுவது நாள் ஆட்டமாம். தலைமை வகிக்க ஜில்லா கலெக்டர் வேறு வந்திருக்கிறார். பாவம், எல்லோரும் உள்ளே வகையாக அகப்பட்டுக் கொண்டு தவிக்கிறாங்க'' என்று கூறி விட்டுப் பறந்தான் அவன்.

ராமநாதனுடைய காய்ச்சல் போன இடம் தெரியவில்லை. உதவி செய்து உரமேறிய அவரது கரங்கள் துடித்தன. ''குடிக்கத் தண்ணீர் வேண்டுமானாலும்கூடச் சாதாரண நாளிலேயே இரண்டு கயிறு கட்டி கிணற்றிலிருந்து எடுக்க வேண்டிய பூமியாயிற்றே இது! இந்தச் சித்திரை மாதத்தில் கடும் கோடைக்காலத்தில் இந்தப் பெருந்தீயை எப்படித்தான் அணைக்கப் போகிறார்களோ?'' என்று கவலையுடன் ஓடினார் ராமநாதன். சாம்புவுக்கு அவரைப் பின்தொடருவது கஷ்டமாக இருந்தது!

அக்னி பகவான், சர்க்கஸ் கூடாரத்தின் உச்சியை எட்டிப் பிடித்துப் பயங்கரமாக விளையாடிக் கொண்டிருந்தார். உள்ளே சிக்கிய ஜனங்கள் வெளியேற வகையின்றித்



கணவன்: இதை அடுப்பிலே கொட்டி எரிச்சுக்கோ! என் வயிற்றுக்குள்ளே போய் எரிஞ்சா ஒரு பலனும் இல்லே.

தவித்துக் கொண்டிருந்தார்கள். தீ வேடிக்கை காட்டுவதற்காக வைக்கப்பட்டிருந்த காட்டு மிருகங்கள் இருந்த கூண்டின் பக்கம் தாவிக் கொண்டிருந்தது!

குளத்தைத் தூர்க்கச் சென்ற இரண்டு தீயணைக்கும் மோட்டார்களும் தங்கள் பின்னால் இணைக்கப்பட்டிருந்த மிகப் பெரிய தொட்டியில் குளத்து நீரை நிரப்பிக் கொண்டு சரியான சமயத்தில் வந்து சேர்ந்தன! பத்தே நிமிஷங்களில் தீ பூரணமாக அணைக்கப்பட்டு விட்டது!

கலெக்டருக்கு அதிசயம் பிடிபடவில்லை. ''இவ்வளவு கடுமையான கோடைக்காலத்தில், இவ்வளவு தண்ணீர்; அதுவும் இவ்வளவு விரைவில் எங்கிருந்து கிடைத்தது?'' என்று வியப்போடு கேட்டார்.

ராமநாதன் வலியச் சென்று விளக்கினார்.

கலெக்டருக்கு ஆத்திரம் பொங்கியது.

''கோடைக்காலத்திலும் கூட நீர் வற்றாத குளத்தைத் தூர்ப்பதா? பைத்தியக்காரத்தனமாக அல்லவா இருக்கிறது! இந்த மாதிரி ஊருக்கு ஒரு குளத்தை வெட்டாவிட்டாலும் இருப்பதையாவது ஒழுங்காக வைத்துக் கொள்ளக் கூடாதா? திடீரென்று ஏற்படும் இந்த மாதிரியான தீ விபத்துக்களுக்காகவாவது இந்தக் குளம் அவசியம். அதோடு குளத்தருகில் இரண்டு தீயணைக்கும் மோட்டாரும் எப்பொழுதும் இருக்க வேண்டும். குளத்தைச் சுத்தமாக்க அரசாங்கத்துக்கு எழுதி வேண்டியவற்றை நான் செய்கிறேன்'' என்று உறுதி கூறினார்.

''குளத்து நீர் சமயத்துக்குக் கிடைத்திருக்கவில்லையென்றால் எனக்கு இன்னும் பலத்த நஷ்டம் ஏற்பட்டிருக்கும். ஆயிரம் ஆயிரமாகக் கொட்டி வேடிக்கை காட்ட வாங்கி வைத்திருக்கும் காட்டு மிருகங்கள் தப்பி, ஊரை அழிக்கப் புறப்பட்டிருக்கும். என்னுடைய நன்றியறிதலை நானும் முருகனுக்குக் காட்டியாக வேண்டும். தெப்பம் கட்ட ஏற்பாடு செய்யுங்கள். செலவு முழுதும் என்னுடையது'' என்றார் சர்க்கஸ் முதலாளி.

மெய்ம்மறந்து நின்றார் ராமநாதன்.




- விலைவாசி ஏற்றம்
- விஞ்ஞானப் படங்கள்
- மயிலைக்கு நஷ்டம்
- மதிப்புக் குறைந்தது

மானத்தோடு வாழ விரும்பும் மத்தியதர மாதச் சம்பளக்காரர்கள் உயிர் வாழ முடியாத நிலைக்கு, முன்பே விலைவாசிகள் உயர்ந்திருக்கின்றன. பொருள்களின் அளவு படியிலிருந்து விட்டராக மொட்டையடித்துக் குறைந்து விட்டது. விலையோ மும்மடங்கு உயர்ந்திருக்கிறது. போதாக் குறைக்கு இந்த ரூபாய் மதிப்புக் குறைப்பு வேறு!

இதனால் அந்நியநாட்டுச் செலாவணியில் தான் மாறுதல் என்று கரடியாகக் கத்தினாலும் முன்பே உயர்ந்துள்ள உள்ளூர் விலைவாசிகள் ஏறத்தான் செய்யும். இப்போதே நடுத்தரக் குடும்பத்தினர் இவ்வளவு சாமான் வேண்டும் என்கிற திட்டத்தை மறந்து இத்தனை ரூபாய்க்குத்தான் சாமான் வாங்க வேண்டும் என்கிற மாறுதலுக்குத் தங்களைப் பழக்கப்படுத்திக் கொள்ள முனைந்துவிட்டார்கள். மேலும் மேலும் விலைவாசி உயரவே திட்டமிட்டிருக்கும் இந்த அநியாயத்தை யாரிடம் சொல்லி அழுவது?

துறையூர்
5-6-66 குடும்பஸ்தன்

சில வாரங்களுக்கு முன்பு கல்கியில் எம்.ஜி.ஆர். அவர்களுக்கு ஒரு வேண்டுகோள் என்ற கட்டுரையைப் பார்த்தேன். அதைத் தொடர்ந்து சிவாஜிகணேசன் அவர்களுடன் பேட்டி என்ற கட்டுரையைப் பார்த்தேன். இரண்டாவது கட்டுரையில் சிவாஜி அவர்கள் சில சந்தேகங்களைச் சொல்லியிருந்தார். அதாவது ஒரு பட அதிபருக்கு லாபம்தான் முக்கியம், அதன்பின்தான் மற்றவையெல்லாம் என்கிறார். முதல் கட்டுரையில் சொன்ன யோசனைகளைப் பின்பற்றினால், பட உலகில் அது புதிய திருப்பமாக இருக்கும். ரசிகர்களும் வரவேற்பார்கள். இரண்டாவதாக இதற்கு விஞ்ஞானிகள் ஒத்துழைக்க வேண்டும், பலருடைய கூட்டு முயற்சியால்தான் இதை உருவாக்க வேண்டும் என்று அவர் சொன்னார். இதற்காகக் கஷ்டப்படத் தேவையில்லை. நாட்டில் இருக்கும் தொழிற்சாலைகளையும் அவை எப்படி இயங்குகின்றன, எவ்வாறு அவை பொருள் உற்பத்தி செய்கின்றன என்பதையும் அங்கேயே சென்று படம் பிடித்துக் காட்டினால் அதுவே ஒரு விஞ்ஞான உணர்வு. காகிதத் தொழிற்சாலை, பீங்கான் தொழிற்சாலை, பத்திரிகை அச்சகம், தீப்பெட்டித் தொழிற்சாலை போன்றவைகளும் பிற பெரிய தொழிற்சாலைகளும் எப்படி இயங்குகின்றன என்பதைப் பதினைந்து நிமிடங்கள் ஓடுவதுபோல் காட்டினால் அதுவே மக்களுக்கு ஓர் ஆர்வத்தை ஏற்படுத்தும். உதாரணமாக, சினிமாத் தொழிலையே எடுத்துக் கொள்வோம். எவ்வாறு படம் பிடிக்கப்படுகிறது. எடிட்டிங் வேலை எவ்வாறு செய்யப்படுகிறது. கலைஞர்கள் டெக்னீஷியன்கள் முதலானவர்கள் எப்படிப் படத்தை உருவாக்குகிறார்கள், கேமரா எவ்வாறு இயங்குகிறது என்பவைப் பற்றிப் படம் எடுத்தால், அதுவே ஒரு விஞ்ஞானப் படமாகிவிடும். அதோடுகூட, அந்த டாக்குமெண்டரிப் படத்திலே அதைத் தயாரிக்கும் ஒரு பட அதிபரோ, அல்லது பிரபல நடிகரோ தோன்றி விளக்க உரையும் வழங்கினால் சிறப்பாகவும் சுவாரசியமாகவும் இருக்கும்.

வேலூர்
5-6-66 முருகன்

பழம் பெரும் குடும்பத்தைச் சேர்ந்த ஸ்ரீ வி. வி. வாசுதேவன் அவர்களின் எதிர்பாராத மறைவு மயிலைக்கே ஒரு நஷ்டமாகும். பிரசித்தி பெற்ற வெண்பாக்கம் குடும்பத்தைச் சேர்ந்தவரும் அஞ்சாநெஞ்சர் என்று பெயர் பெற்றவருமான வக்கீல் ஸ்ரீ வி. வி. சேஷாச்சாரியாரின் புதல்வரான ஸ்ரீ வாசுதேவன் தம் தந்தை ஆரம்பித்து நடத்தி வந்த 'லா வீக்லி' என்னும் சட்டப் பத்திரிகையைத் திறம்பட நடத்தி வந்தார். தம் தந்தையைப் போலவே சிறந்த சங்கீத ரஸிகர். அவரை அறியாத சங்கீத வித்துவான் இருக்க முடியாது. மயிலையில் தனுர்மாத பஜனைக் கோஷ்டியில் அவருக்கிருந்த ஊக்கமும் உற்சாகமும் அவருக்குக் கணக்கிலடங்காத நண்பர்களைத் தந்தது. குழந்தை போன்ற கபடமில்லாத சுபாவம் நிறைந்தவர். சரீர பாதை ஏதுமில்லாமல் சற்றும் எதிர்பாராத வகையில் துயிலிலேயே இறைவனடி சேர்ந்தார். இசைக் கலைஞர்கள் பலரும் வழக்கறிஞர்கள் பலரும் ஓர் உற்ற நண்பரை இழந்து நிற்கிறார்கள்.

மயிலாப்பூர்
12-6-66 டி. எஸ். ஆர்.

ஓட்டு வாங்கி ஆளும் கூட்டம்
என்ன செய்தாங்க? — நம்ப
துயரம் போச்சாங்க?
நாட்டை வாட்டும் வறுமை இன்று
விலகிப் போச்சாங்க? — விலைகள்
குறைஞ்சு போச்சாங்க?
நாணயத்தின் மதிப்பை எல்லாம்
குறைய வச்சாங்க! — நம்ப
மதிப்பும் போச்சுங்க!
ஆணவத்தின் அரசகற்ற
ஒன்று சேருங்க! - நல்ல
அரசு காணுங்க!

திருவள்ளூர்
10-6-66 சிலம்பன்

Edited printed & published by T Sadasivam on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk. Madras 10

# உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன் குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புப் பருவக்
கோளாறுகள் ஆகியவற்றிலிருந்து உடனடி நிவாரணம்
தருவது உட்வார்ட்ஸ். எப்போதும் உட்வர்ட்ஸ் கிரைப்
வாட்டர் உங்கள் வசம் இருக்கட்டும்.




100 ஆண்டுகளுக்கு மேலாக
புத்திசாலித் தாய்மார்களால்
உபயோகிக்கப்
பட்டுவருகிறது.

LPE Aiyars. F. 10 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon